
ஹிமாலயா
புக்கே
டாய்லட்,டால்கம் பௌடர்களின்
இனிமையான நறுமணத்தை
நீங்களும் விரும்புவீர்கள்
Himalaya Bouquet
Himalaya Bouquet
இரண்டு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்புகள்
HBP. 5-X30 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 11 | இதழ் 44 — **1952 ஜூன் 1** — நந்தன ௵ வைகாசி 19




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## உயிர் வருமா?




சென்ற வாரத்தில் சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்கள் மகாநாடு கூடி மேற்படி கட்சிக்குப் புத்துயிர் அளிப்பது பற்றித் தீவிரமாக ஆலோசித்தார்கள்.



ஜுபிடர்
தயாரிப்பு
ராணி
சென்னை
பாரகன்
ஸ்ரீ கிருஷ்ணா
சயானி
மற்றும் தென்னாடெங்கும் நடைபெறுகிறது
JUPITER PICTURES CIRCUIT
டைரக்ஷன் : பிரசாத்... ஸ்டுடியோ : சென்ட்ரல் & நெப்ட்யூன்

கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
நாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 44

# ஐரோப்பாவில் 'கொரியா'

அகில உலகத்தையும் கிடுகிடுக்கச் செய்தவரும் ஐரோப்பிய நாடுகளை நடு நடுங்கச் செய்தவரும் ஜெர்மன் வல்லரசின் ஏக சக்ராதிபதியாக விளங்கியவருமான அடால்ப் ஹிட்லர் கூறிய ஜோசியம் அப்படியே பலித்து விட்டது.

ஜெர்மனி பிரிட்டனை விரோதித்துக் கொள்வதாயின் ருஷ்யாவின் நட்பைப் பெற வேண்டும்; ருஷ்யாவை விரோதித்துக் கொள்வதாயின் பிரிட்டனின் நட்பை இழக்காமல் இருக்க வேண்டும். ஏக காலத்தில் பிரிட்டனையும் ருஷ்யாவையும் விரோதித்துக் கொள்வதைக் காட்டிலும் ஜெர்மனி அடியோடு அழிவதற்குரிய காரியம் வேறு எதுவும் இருக்க முடியாது.—இவ்வாறு ஹிட்லர் முப்பது ஆண்டுகளுக்கு முன் தாம் எழுதிய 'மேன் காம்ப்' என்ற நூலில் குறிப்பிட்டிருந்தார்.

ஆனால், இந்த மகத்தான உண்மையை அறிந்திருந்த ஹிட்லரின் கண்களைப் போர் வெறி மறைத்து விட்டது.

சென்ற மகாயுத்தத்தின்போது ஜெர்மனி பிரிட்டனையும் ருஷ்யாவையும் ஏக காலத்தில் எதிர்த்துப் போரில் இறங்கியதால் அடியோடு அழிந்தது.

இரண்டாவது மகா கோர யுத்தம் நடந்துகொண்டிருந்த காலத்தில் ஹிட்லர் கூறிய மற்றொரு ஜோசியமும் பலித்து விடுமோ என்று எண்ணவேண்டி யிருக்கிறது.

"இந்த யுத்தத்தில் ஜெர்மனி வெற்றி பெற்றால் நமது நாட்டை இன்னும் ஆயிரம் வருஷ காலத்துக்கு யாராலும் அசைக்க முடியாது; தோல்வியுற்றால் ஜெர்மனியை இன்னும் ஆயிரம் வருஷ காலத்துக்கு யாராலும் உய்விக்க முடியாது" என்று ஹிட்லர் ஜெர்மன் மக்களுக்கு அடிக்கடி வற்புறுத்திக் கூறினர்.

உலகிலேயே இணையற்ற இராணுவ பலத்துடன் விளங்கிய ஜெர்மனி சென்ற மகா யுத்தத்தில் படு தோல்வியுற்று, கொரியாவைப்போல் வல்லரசுகளால் துண்டாடப்பட்டது. அன்றிருந்து இன்றுவரையில் மேற்கு ஜெர்மனி அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இந்த மூன்று வல்லரசுகளின் நிர்வாகத்தில் இருக்கிறது; கிழக்கு ஜெர்மனி ருஷ்யாவின் நிர்வாகத்தில் இருக்கிறது.

அதன் விளைவாக, ஒரே நாடாக இருந்த ஜெர்மனியின் ஒரு பகுதியில் ஒரு கொள்கையும், மற்றொரு பகுதியில் அதற்கு நேர்மாறான மற்றொரு கொள்கையும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன.

சென்ற ஏழு ஆண்டுகளாக அடிமை வாழ்வை நடத்தி வந்த மேற்கு ஜெர்மானியர்களுக்குச் 'சுதந்திரம்' அளித்துச் சென்ற திங்கட்கிழமை ஓர் உடன்படிக்கை ஏற்பட்டிருக்கிறது. அந்த உடன்படிக்கையில் பிரிட்டிஷ், அமெரிக்க, பிரஞ்சுப் பிரதிநிதிகள் கையெழுத் திட்டிருக்கிறார்கள்.

மேற்படி 'சுதந்திர' உடன்படிக்கை எளிதில் ஏற்பட்டுவிடவில்லை. பல மாதங்களாக நடந்த வாய்ச் சண்டைக்குப் பிறகுதான் அது ஏற்படுவது சாத்தியமாயிற்று.

அந்த உடன்படிக்கை எப்போது அமுலுக்கு வரும் என்பதை யாராலும் சொல்ல முடியாது. ஏனெனில் அது அமுலுக்கு வருமுன் எத்தனையோ சடங்குகளும் நிபந்தனைகளும் பூர்த்தியாக வேண்டும்.

மேற்கு ஜெர்மனிக்குச் சுதந்திரம் அளிப்பதையும் இராணுவத்தைப் பெருக்கிக் கொள்ள உரிமை வழங்குவதையும் பிரஞ்சு சர்க்கார் ஆட்சேபிக்கின்றனர்; ருஷ்ய சர்க்கார் கண்டிக்கின்றனர்; அத்தகைய உரிமை அளிப்பதைக் கிழக்கு ஜெர்மானியர்கள் கூட விரும்பவில்லை!

கொரியா யுத்தம் ஏற்படுவதற்கு முன் வட கொரியாவிலும் தென் கொரியாவிலும் எத்தகைய கொந்தளிப்பான நிலைமை இருந்து வந்ததோ, அது போலவே இன்று மேற்கு ஜெர்மனியிலும் கிழக்கு ஜெர்மனியிலும் இருந்து வருகிறது.

கொரியா யுத்தம் மூண்டபோது அந்த நாடு வல்லரசுகளின் நேரடியான நிர்வாகத்தில் இல்லை. அப்படியிருந்தும் கொரியா யுத்தத்தில் வல்லரசுகள் பங்கெடுத்துக் கொண்டன. அந்தப் போர் உலக மகா யுத்தமாக மாறக் கூடுமோ என்ற பயங்கரமான நிலைமையும் ஏற்பட்டது. அந்த யுத்தம் மூண்டு இரண்டு வருஷங்களாகியும் இன்னும் அது தீர்ந்தபாடில்லை. அவ் விஷயமாக ஒரு வருஷமாக நடந்து வரும் சமரசப் பேச்சின் கதி நித்திய கண்டமாக இருந்து வருகிறது.

அப்படியிருக்க, போட்டி வல்லரசுகளின் நேர் நிர்வாகத்தில் இருக்கும் ஜெர்மனியில் கொந்தளிப்பு மூற்றினால் கொரியாவைக் காட்டிலும் அதிக பயங்கரமான நிலைமை ஏற்படாது என்று சொல்லுவதற்கில்லை

ஐரோப்பாவின் தற்காப்பு முஸ்தீப்புகளில் மேற்கு ஜெர்மனி பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகள் விரும்புகின்றன. மேற்கு ஜெர்மனியும் கிழக்கு ஜெர்மனியும் இணைக்கப்பட்டு ஐக்கிய ஜெர்மனியாகத் திகழ வேண்டும்; ஆனால் ஐக்கிய ஜெர்மனி நடுநிலைமையைக் கடைப் பிடிக்க வேண்டும் என்று ருஷ்யா வற்புறுத்துகிறது.

இவ்விஷயமாக பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளுக்கும் ருஷ்யாவுக்கும் உள்ள அபிப்பிராய பேதம் தீர்ந்தாலன்றி, ஜெர்மனி சம்பந்தமாக ஏற்படும் எந்த உடன்படிக்கையும் உருப்படுவதற்கில்லை.

ஜெர்மனி பிரிக்கப்பட்டிருக்கும் வரையில், ஜெர்மனியில் வல்லரசுகளின் ஆதிக்கம் இருந்துவரும் வரையில் எத்தனை உடன்படிக்கைகள் ஏற்பட்டாலும் ஜெர்மன் மக்களின் அடிமை வாழ்வு ஒழிவதற்கு வழி உண்டாகாது. உலக அமைதி நீடிப்பதற்கு இடம் ஏற்படாது.

# பாழுங் கிணற்றில் விழுவாராம்!

ஆச்சாரிய கிருபளானி அதி மேதாவி என்பதை அறிவோம். ஆனால் பாழுங் கிணற்றில் விழுந்து அங்கேயே நிற்கும் சக்தி அவருக்கு உண்டு என்பது இது வரை நமக்குத் தெரியாது. "என்னால் அதுவும் முடியும்" என்று கிருபளானி சமீபத்தில் சொல்லியிருக்கிறார்.

இந்த தேசத்தின் முன்னால் இப்போது ஒரே ஒரு பெரிய பிரச்னைதான் பிரம்மாண்டமாக எழுந்து நிற்கிறதாம். "காந்தியமா! கம்யூனிஸமா!" என்பதுதான் அந்தப் பிரச்னையாம்.

தேசம் காந்தியத்தை ஒப்புக் கொள்ளா விட்டால் கம்யூனிஸப் படுகுழியில்தான் விழும்படி நேரிடும் என்று கிருபளானி எச்சரிக்கிறார்.

ஆனால் அதே சமயத்தில் இன்னும் ஒன்றும் சொல்லியிருக்கிறார். அவர் தலைமை தாங்கும் பிரஜா கட்சியினர் சட்டசபைகளுக்கு வெளியில் கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைக்க மாட்டார்களாம். ஆனால் சட்டசபைகளுக்குள்ளே கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைக்கக் கூடுமாம்!

இது பாழுங் கிணற்றில் விழுவது போன்ற விந்தையான காரியமே யல்லவா!

காந்தியமும் கம்யூனிஸமும் அடிப்படையில் முற்றும் மாறுபட்ட கொள்கைகள்.

காந்தியத்துக்கு அஹிம்சையே ஜீவன். காந்திய வாதிகள் உலகமே நஷ்டமாவதாயிருந்தாலும் அஹிம்சையைக் கைவிட மாட்டார்கள்.

ஆனால் கம்யூனிஸ்டுகள் பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் என்பது பிரசித்தம்.

கிருபளானி தம்மைக் காந்தியவாதி என்று சொல்லிக் கொள்கிறார். அது மட்டுமல்ல; காந்தி மகான் அமரரானபோது இவ்வுலகில் காந்தியத்தைப் பாதுகாக்கும் பொறுப்பையே தம்மிடம் ஒப்புவித்து விட்டுப் போனதாகவும் பறை சாற்றிக்கொண்டு வருகிறார்.

அப்படிப்பட்ட பெரியார் சட்டசபைகளுக்குள்ளே மட்டும் கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைப்பதாகச் சொல்வது பெரு வியப்பு அல்லவா!

"பாழுங் கிணறுதான் விழப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டு ஒருவர் கிணற்றில் விழலாம். ஆனால் பாழுங் கிணற்றுடன் நிற்பது மிகக் கடினமான காரியம். ஒன்று தட்டுத் தடுமாறி மேலே ஏறி வரவேண்டும்; அல்லது கிணற்றின் அடிக்கே போக வேண்டியதுதான்.

பிரஜா கட்சியின் வருங்காலத் திட்டத்தை நிர்ணயிப்பதற்காகப் புது டில்லியில் மேற்படி கட்சியின் கூட்டம் நடைபெறப் போகிறதாம். அந்தக் கூட்டத்தில் பாழுங் கிணறு விழும் யோசனை நிராகரிக்கப்படும் என்று நம்புகிறோம்.

# டகாப் பிரசாரகர்கள்!

காங்கிரஸ் எதிரிகள் சிலர் பிரசார மேடையில் ஏறியதும் அடியோடு நிதானம் இழந்து அறிவுள்ள மனிதர்கள் பேசத் தகாத வார்த்தைகளையெல்லாம் பேசுகிறார்கள். காங்கிரஸ் மந்திரிகளையும் மற்றும் காங்கிரஸை ஆதரிப்பவர்களையும் 'அடா! புடா!' என்று கூவி அழைத்து, எதிரில் அவர்கள் நிற்பது போல் பாவித்துக் கொண்டு, ஆபாச வசைச் சொற்களைக் கொட்டுகிறார்கள். 'நாய் நரி' 'பயல் பரட்டை' என்பவை சர்வ சாதாரணம். 'குடலைப் பிடுங்கி மாலை போட்டுக் கொள்வேன்' என்பது போன்ற கோர பயங்கர ஸவால்கள் விடுவோர் பலர். மேடையிலேயே காறித் துப்பித் தங்கள் வீரத்தையும் சூரத்தனத்தையும் நிலை நாட்டிக்கொள்வோர் இன்னும் சிலர்.

அந்த அநாகரிக ஆபாசங்களையெல்லாம் ஸ்ரீ ஈ. வே. ராமசாமிப் பெரியார் அவர்களாலேயே பொறுக்க முடியவில்லை. அவர் தலைமை வகித்த கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் முடிவுரை கூறும்போது "இம்மாதிரி யெல்லாம் பேசுவது நல்லதல்ல" என்று கூறியதாக அறிகிறோம்.

இப்படி யெல்லாம் ஆபாசமாகப் பேசுகிறவர்கள் தங்களைத் தமிழர்கள் என்று கூறிக் கொள்வது தமிழர் சமூகத்துக்கு அவமானமாகும். தமிழ் மறை பாடிய தெய்வப் புலவர்,

'இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' என்றும்.

'யாகாவாராயினும் நாகாக்க! காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு'

என்றும் கூறியிருப்பதை இந்த ஆபாச வசை மொழிக் களஞ்சியங்கள் அறிந்ததில்லை போலும்.

காங்கிரஸ் வாதிகளுக்குள்ளேயும் மேடைப் பேச்சில் வல்லவர்கள் பலர் இருக்கிறார்கள். காங்கிரஸ் எதிரிகள் போடும் ஒவ்வொரு டகரத்துக்கும் ஒன்பது டகரத்தை உபயோகித்துப் பேசுவார்கள்.

"ராஜாஜிக்குப் பிடிக்காதே என்பதற்காக நாங்கள் சும்மா இருக்கிறோம்" என்று இவர்களில் ஒருவர் இப்பத்திரிகை ஆசிரியரிடம் கூறினார்.

ராஜாஜிக்குப் பிடிக்காது என்பது மட்டுமல்ல; தமிழர் சமூகத்துக்கே பிடிக்காது என்று நாம் உறுதியாகச் சொல்ல முடியும்.

காங்கிரஸ் எதிரிகள் இம்மாதிரி டகர வரிசையில் இறங்கிப் பேசும்போது, அதைக்கேட்டு உற்சாகப் பட்டுச் சிலர் கூட்டத்தில் கை தட்டுகிறார்கள். அதைக் குறித்து யாரும் ஏமாந்துவிட வேண்டாம். இப்படிப்பட்ட பேச்சுக்களுக்குக் கை தட்டுவதற்காகவே அந்தச் சிலர் கூட்டத்தினர் முன்னால் வந்து உட்கார்ந்து கொள்கிறார்கள்.

மற்றப்படி தமிழ்ப் பெருமக்கள் அத்தகைய ஆபாசமான மரியாதையற்ற பேச்சுக்களைக் கேட்டு அருவருப்பே அடைகிறார்கள்.

தமிழ்ப் பெருமக்கள் புராதனமான பண்பாட்டுச் செல்வத்துக்கு உரிமையுள்ளவர்கள். ஆபாசச் சொற்களுக்கும் வசைத் தமிழுக்கும் தமிழ்நாட்டில் தமிழ்ப் பொதுமக்களிடையில் ஒருநாளும் நீடித்த செல்வாக்கு ஏற்பட முடியாது.

தமிழ்ப் பத்திரிகைகளின் சரித்திரத்தைப் பார்த்து இதை நாம் நன்கறிந்து கொள்ளலாம்.

ஒவ்வொரு சமயம் ஆபாச வசை மொழிப் பத்திரிகை ஒன்று தமிழ்நாட்டில் கிளம்புகிறது. சிலநாள் அந்தப் பத்திரிகையைப் பற்றியே எங்கும் பேச்சாயிருக்கிறது. "இப்படியும் ஒரு பத்திரிகை வருகிறதே!" என்று பலர் வருத்தமும் ஆத்திரமும் அடைவதினாலேயே அது சிலகாலம் அதிக பிரபலமடைந்திருப்பதாகத் தோன்றுகிறது.

ஆறு மாதம் அல்லது ஒரு வருஷத்துக்குப் பிறகு அத்தகைய ஆபாசப் பத்திரிகைகள் இருந்த இடம் தெரியாமல் போய் விடுகின்றன.

பாரத நாட்டிலேயே தமிழ்ப் பெருமக்கள் பண்பாட்டில் சிறந்தவர்கள். ஆபாச வசை மொழிகளும், அவமரியாதையான டடடாப் பிரயோகங்களும், மேடையில் காறி உமிழ்தல் போன்ற காரியங்களும் தமிழ் மக்களுக்கு அருவருப்பையே அளிக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

காங்கிரஸ் எதிரிகளே அத்தகைய இழிந்த முறைகளைக் கையாளட்டும்; கையாண்டு தங்கள் கட்சிக்குத் தாங்களே ஆழமாகக் குழி தோண்டிக் கொள்ளட்டும்.

காங்கிரஸ் பேச்சாளர்கள் காங்கிரஸின் எதிரிகளைப் பற்றிப் பேசும்போது தமிழர் பண்பாட்டுக்கு உகந்த மரியாதையான சொற்களையே உபயோகப்படுத்திப் பேசுவார்களாக.

# நாம் பிரார்த்தனை செய்யவில்லை!

சென்ற இதழில் நாம் தலையங்கம் எழுதத் தொடங்கியபோது சென்னையில் மழை பெய்ய ஆரம்பித்திருந்தது. பிறகு, கொட்டு கொட்டு என்று கொட்டி விட்டது! பஞ்சப் பிரதேசங்களாகிய ராயலசீமையிலும், செங்கற்பட்டு, வடாற்காடு ஜில்லாக்களிலும்கூட நல்ல மழை பெய்து பூமி குளிர்ந்து, மக்களின் உள்ளங்களும் குளிர்ந்திருக்கின்றன.

இதனால் கடவுளுக்கே யோகம் பிறந்து விட்டதாகக் காண்கிறது. 'பிரார்த்தனைக்கும் நல்ல யோகம் பிறந்திருப்பதாகத் தோன்றுகிறது.

கடவுள் பெயரைச் சொல்லவும் பிரார்த்தனையைப் பற்றிப் பேசவும் வெட்கப்பட்டுக் கொண்டிருந்த காலம் போய், "மழைக்காக நாங்கள் கடவுளைப் பிரார்த்தித்தோம்" "நாங்களும் பிரார்த்தனை செலுத்தினோம்" என்று பல சமயத்தினரும் பற்பல ஸ்தாபனங்களும் தனி மனிதர்கள் பலரும் சொல்லிக் கொள்ள முன் வருகிறார்கள்.

மழையினால் நேர்ந்த மற்ற நன்மைகளோடு இதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

உண்மை உள்ளத்துடன் பலரும் பிரார்த்தனை செய்ததினாலேயே இவ்விதம் கடுங்கோடைக் காலத்தில் பெரு மழை பெய்து தண்ணீர்ப் பஞ்சம் நிவர்த்தியாயிற்று என்று சொல்வது பிழையாகாது.

"பிரார்த்தனையைப் பற்றி இவ்வளவு எழுதியிருக்கிறீரே! நீர் மழைக்காகப் பிரார்த்தனை செய்தீரா!" என்று ஒரு நேயர் கேட்டிருக்கிறார்.

நாம் பிரார்த்தனை செய்யவில்லை என்பதை ஒப்புக்கொண்டு விடுகிறோம்.

நம்முடைய பிரார்த்தனை இல்லாமலே கட்டாயம் மழை பொழியும் என்ற திடமான நம்பிக்கை நமக்கு இருந்துவந்ததுதான் காரணம்.

பிரார்த்தனையின் சக்தியில் நமக்கு உள்ள நம்பிக்கையைக் காட்டிலும் மகான்களுடைய தபோபலத்தில் நமக்கு நம்பிக்கை அதிகம்.

ராஜாஜி டில்லியிலிருந்து ஆகாச விமானத்தில் வந்து மீனம்பாக்கம் விமான நிலையத்தில் இறங்கியவுடன் அப்போதிருந்த கவர்னர் பவநகர் மகாராஜாவைப் பார்த்து "மழை உண்டா!" என்று கேட்டார். ராஜாஜி வந்து சேர்ந்த இரண்டு தினங்களில் கொஞ்சம் மழையும் பெய்தது.

"மகான் வந்தார்! மழை பெய்தது!" என்று உடனே நாம் எழுதியிருந்தோம்.

ஆனால் வருண பகவான் அப்போது கொஞ்சம் நிதானித்துக் கொண்டார்.

ராஜாஜி டில்லியிலிருந்து திரும்பி வந்தது மட்டும் போதாது,—அவர் இம் மாகாணத்தின் முதன் மந்திரியாகவும் வரவேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தார் போலும்!

மகான் மந்திரியாக வந்தார்; மழையும் கொட்டு கொட்டு என்று கொட்டிவிட்டது!

•  •  •

மேற் கண்டவாறு நாம் எழுதிய பிறகு கோயமுத்தூரில் ராஜாஜி நிகழ்த்திய பிரசங்கத்தைப் படிக்க நேர்ந்தது.

"கடவுளின் கருணையினால் மழை பெய்தது! அந்தப் பழியை என் தலையில் போடவேண்டாம்" என்று கட்டளையிட்டிருக்கிறார்.

ஆதலின், "மழைக்குக் காரணம் மகான் ராஜாஜி" என்று சொன்னதை வாபஸ் பெற்றுக் கொள்கிறோம்.

ராஜாஜியிடம் நாமும் நம் நேயர்களும் தமிழ்ப் பொதுமக்களும் வைத்திருந்த நம்பிக்கைதான் காரணம் என்று மாற்றிக் கொள்கிறோம்.

# இதோ திருவாளர் அழுமூஞ்சியார்

எந்தகைய சந்தோஷமான சந்தர்ப்பத்திலும் அழுது தீர்ப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவர்கள் சிலர் உண்டு.

கலியாணம் குதூகலமாய் நடந்துகொண்டிருக்கும்போது "இப்போது மேளம் தாளம் ஆர்ப்பாட்டம்! நாளைக்கு இந்த மாப்பிள்ளைக்குத் தலைவலி, காலைக் காலி வலித்தால் இந்தப் பெண் எவ்வளவு மன வேதனை அடைய வேண்டி வரும்!" என்று எண்ணிச் சிலர் அழுவார்கள்.

டைபாய்டு ஜுரம் வந்து வைத்தியர்களும் கைவிட்ட பிறகு கடவுள் அருளால் ஒருவர் பிழைத்து எழுந்தால், "பிழைத்து எழுந்து என்ன பயன்! தலைக் கூந்தல் கொட்டி விட்டதே!" என்று சிலர் கண்ணீர் விடுவார்கள்.

இந்தப் பஞ்சகாலத்தில் அருமையாகக் கிடைத்த அறுசுவை உண்டி அருந்தி எழுந்த பிறகு, "பச்சடிக்குக் கொஞ்சம் உப்புக் குறைவாய்ப் போய் விட்டது" என்பதைப் பற்றியே சிலர் குறைப்பட்டுக் கொண்டிருப்பார்கள்.

இத்தகைய அழுமூஞ்சி ராயர்கள் சமீபத்தில் பெய்த மழையை அநுபவிக்கும் முறையும் ஒரு தனி ரகமாகத்தானிருக்கிறது.

ஜப்பான் யுத்த பீதியினால் சென்னை நகரம் காலி செய்யப்பட்டது போல் இந்த வருஷம் ஜூன் மாதத்தில் குடி தண்ணீர்ப் பஞ்சத்தினால் காலி செய்ய நேரிடலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது.

அப்பேர்ப்பட்ட அபாயத்திலிருந்து சென்னை நகரம் காப்பாற்றப்பட்டது.

கர்நூல், கடப்பை முதலிய ஜில்லாக்கள் அடங்கிய ராயலசீமையில் மக்களும் கால் நடைகளும் குடிக்கத் தண்ணீர் இல்லாமல் பட்ட கஷ்டங்களைப் பற்றிப் பத்திரிகைகளில் பயங்கரமான செய்திகள் வெளிவந்தன. அத்தகைய பிரதேசத்தில் மழை கொட்டு கொட்டு என்று கொட்டி ஏரிகளில் நீர் ததும்பி நிற்கிறது! இது எத்தகைய பெருமகிழ்ச்சிக்குரிய அற்புதம்!

இப்பேர்ப்பட்ட அற்புதங்களைக் குறித்தும் சந்தோஷப்படச் சிலர் கொடுத்து வைக்கவில்லை.

சென்னை நகரில் மழை பெய்தபோது ஒருவர் சாலையில் சறுக்கி விழுந்தது பற்றியும், இன்னொருவருடைய வெள்ளைத் துணியில் சேறு பட்டு அழுக்காய்ப் போனது பற்றியும் எண்ணித் துக்கப்படுகிறவர்களைக் காண்கிறோம்.

"மழையில் நனைந்து ஜலதோஷம் பிடித்து விட்டதே!" என்று சிலர் வருந்துகிறார்கள்.

"பதினெட்டரை அங்குல மழை ஏன் பெய்திருக்க வேண்டும்! பதினெட்டோடால் அங்குலத்தோடு நின்றிருக்கக் கூடாதா!" என்று சிலர் அங்கலாய்க்கிறார்கள்.

"புழலேரியில் 36 அடி தண்ணீர்தானே வந்திருக்கிறது! 37½ அடி வந்திருக்கக் கூடாதா!" என்று வேறு சிலர் துக்கப்படுகிறார்கள்

மாளிகைகளிலும் பங்களாக்களிலும் வசிப்பவர்கள் ஏழைகளின் குடிசைகளுக்கு மழையினால் நேர்ந்த விபத்தை எண்ணிப் படும் துயருக்கு அளவேயில்லை. இவர்கள் விடும் கண்ணீர் வெள்

## பிடிபடுமா?




புதிய உணவு மந்திரி ஜனாப் கித்வாய் உணவுப் பொருள்களின் விலைகளைக் குறைப்பதற்குப் பெரு முயற்சி செய்யப் போகிறாராம்.

ளத்தில் அந்தக் குடிசைகள் இன்னும் கொஞ்சம் ஆழத்தில் அமிழ்ந்து விடுகின்றன.

எப்போது மழை பெய்தாலும் அதனால் சில சில்லறைச் சங்கடங்கள் ஏற்படத்தான் செய்யும். அச் சங்கடங்களை ஆங்காங்குள்ள அதிகாரிகளும் பொதுஸ்தாபனங்களும் நிவர்த்தி செய்துவிடலாம்.

எப்படிப்பட்ட பேரபாயத்திலிருந்து இந்த மாகாணமும் மாகாண மக்களும் தப்பிப் பிழைத்தார்கள் என்பதை எண்ணிப் பார்த்து மகிழாமல், மழையினால் நேர்ந்த சில்லறை அசௌகரியங்களை நினைத்து அழுகிறார்களே, அவர்களைப் பற்றி என்னவென்று சொல்லுவது!

அத்தகைய அழுமூஞ்சித் திருவாளர்களை எண்ணி நாம் வருத்தப்பட வேண்டியதில்லை. "இப்படியும் சில பிரகிருதிகள் இருக்கிறார்களே!" என்று வாய்விட்டுச் சிரிக்கத்தான் வேண்டும்!

# இந்த மட்டும் விட்டார்களே!

அஸ்திவார சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் சம்பளம் வாங்காமல் கல்விப் பயிற்சி அளிக்க வேண்டும் என்று ராஜாஜி சர்க்கார் வந்ததும் ஓர் உத்தரவு பிறப்பித்தனர்.

சொற்ப சம்பளத்தில் கஷ்ட ஜீவனம் நடத்தும் கெஜட் பதவியில்லாத உத்தியோகஸ்தர்களுக்கு இது பெரிய உதவி யென்று பெரும்பாலோர் சந்தோஷப்பட்டார்கள். சிலர் "இது போதாது" என்றும் சொன்னார்கள்.

போதும் என்று யார் சொன்னது! ஒருவரும் சொல்லவில்லை. கிடைத்த உதவியைப் பெற்று முதலில் சந்தோஷப்பட்டு விட்டுப் பிறகு மறுபடியும் குறைகளைத் தெரிவிக்கத் தொடங்கினால், அதில் முறைதவறு ஒன்றுமில்லை. "சந்தோஷப் படவே முடியாது" என்று கூறினார்களானால், அதுவும் அவர்களுடைய அதிர்ஷ்டத்தைச் சேர்ந்தது என்று வைத்துக் கொள்ளலாம்.

கள்ளிக்கோட்டையில் கூடிய அஸ்திவார உத்தியோகஸ்தர்கள் சங்கத்தில் மூன்றாவது வழி ஒன்றைக் கடைப்பிடித்தார்கள். "பள்ளிக்கூடச் சம்பளமில்லை யென்று சொன்னதற்காக வந்தனம்" என்று ஒரு கோஷ்டியார் தீர்மானம் கொண்டு வந்தார்கள். அந்தத் தீர்மானத்துக்குப் பெரும்பான்மையோர் எதிராக வோட்டுக் கொடுத்துத் தோற்க அடித்தார்கள்!

ராஜாஜிக்கு யாருடைய வந்தனமும் நன்றியும் தேவையில்லை. வந்தனத்தையும் நன்றியையும் எதிர்பாராமலே அவர் செய்யக்கூடிய நன்மைகளையெல்லாம் செய்தே தீருவார்.

ஆனால், நன்மை செய்தவர்கள் பேரில் கல்லை விட்டெறிவது என்பது இந்த உலகத்தில் சில கூட்டத்தார் கடைப்பிடிக்கும் சம்பிரதாயமாகும்.

அந்தச் சம்பிரதாயத்தைக் கடைப் பிடித்து ராஜாஜியின் பேரில் கல்லை விட்டு எறிவது என்று தீர்மானியாமல், "வந்தனம் இல்லை" என்று சொல்வதோடு நிறுத்திக் கொண்டார்களே, அதற்காக நாம் மேற்படி சங்கத்தாருக்கு அனந்த கோடி வந்தனம் செலுத்துகிறோம்!

# விடைபெற்றுக் கொண்டார்கள்!

தமிழ் நாட்டில் பல துறைகளிலும் புகழ் பெற்றிருந்த பிரமுகர்கள் சிலர் சமீப காலத்தில் நம்மை விட்டுப் பிரிந்து வானவர் உலகை அடைந்து விட்டார்கள்.

டாக்டர் யூ. ராம ராவ் பழம் பெரும் தேசியவாதி. 1920-ம் ஆண்டில், ஜஸ்டிஸ் கட்சி தோன்றி வெகு மும்முரமாகப் பரவி வந்த நாட்களில், சென்னை நகரத் தொகுதியில் டாக்டர் யூ. ராம ராவ் பொதுத் தேர்தலில் போட்டியிட்டு வெற்றியடைந்தார். அன்று முதல் சட்டசபைக்கு உள்ளேயும் வெளியிலேயும் அவர் புரிந்த தொண்டுகள் அனந்தம். உப்பு சத்தியாக்கிரஹ இயக்கம் சென்னை நகரில் நடந்தபோது அடிபட்ட தேசத் தொண்டர்களுக்கு டாக்டர் ராம ராவ் செய்த உதவிகளைத் தேவலோகத்துப் புத்தகத்தில் பொன்னெழுத்தில் எழுதி வைத்திருப்பார்கள். பழைய ராஜாஜி மந்திரி சபை நடந்தபோது டாக்டர் யூ. ராம ராவ் மேல் சட்டசபைத் தலைவராக இருந்தார். ராஜாஜியின் பூரண மரியாதைக்கும் அன்புக்கும் பாத்திரமான நண்பர்களில் டாக்டர் ராம ராவ் ஒருவர். தம்முடைய புதல்வர் டாக்டர் யூ. கிருஷ்ண ராவ் இதே சென்னை நகரில் தேர்தலுக்கு நின்று வெற்றி யடைந்து மந்திரியானதைக் கண்டு மகிழ்ந்தார். புதல்வரை அழைத்து ஒரு டம்ளர் தண்ணீர் கேட்டு வாங்கி அருந்திவிட்டு அனாயாச மரணமடைந்தார்.

காருகுடி ஸ்ரீ சின்னையா பிள்ளை என்னும் தேச பக்தரின் பெயரை நேயர்கள் அறிந்திருப்பார்கள். தேசிய இயக்கத்தின் ஆரம்ப நாட்களில் ஸ்ரீ திரு. வி. கலியாண சுந்தர முதலியார் அவர்களால் 'மயூரமணி' என்று பட்டம் சூட்டப் பட்டவர். தஞ்சை ஜில்லாவின் பெரிய மிராசுதார் வர்க்கத்தைச் சேர்ந்தவர். தேச விடுதலைப் போரில் இரு முறை சிறை சென்றவர். இவரும் சில தினங்களுக்கு முன்பு இந்த உலக வாழ்வை நீத்து இறைவன் திருவடியை அடைந்தார்.

சென்ற வாரத்தில் நம்மை விட்டுச் சென்ற இன்னொரு பெரியார் பேட்டை ஸ்ரீ எவனப்ப முதலியார் அவர்கள். இவர் காலஞ்சென்ற ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் அவர்களின் தமையனார். மராமத்து இலாகா மந்திரியாக நீண்ட காலம் சேவை செய்து, தற்போது "பாரததேவி" பத்திரிகையைச் சிறப்பாக நடத்திவரும் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்களின் தாய் மாமன். தெய்வ பக்தியிலும் தேச பக்தியிலும் தலை சிறந்தவர். இவருக்கும் இவருடைய இளைய சகோதரர் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியாருக்கும் இருந்த உறவு ஸ்ரீராம லக்ஷ்மணர்களின் உறவைப் போன்றது. ஸ்ரீ முத்துரங்க முதலியார் காலமானதிலிருந்து உள்ளமும் உடலும் தளர்ந்துவிட்ட இப் பெரியார் தம் ஏக புதல்வராகிய ஸ்ரீ சி. என். வரதப்பன் அவர்களையும் மற்ற உறவினரையும் துயரக் கடலில் ஆழ்த்தி விட்டுச் சென்று விட்டார்.

கலை உலகத்தில் சங்கீதக் கலைக் களஞ்சியமாகவும் பக்திப் பெருஞ் சுடராகவும் விளங்கி வந்த ஸ்ரீமதி பெங்களூர் நாகரத்தின அம்மாள்

மகா சமாதி அடைந்து விட்டார்கள். காவியங்களில் நாம் படித்திருக்கும் மாதவி, மணிமேகலை போன்ற தபஸ்வினிகளைப் போல் இவர் பல வருஷ காலம் வாழ்க்கை நடத்தினார். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளைத் தமது பரம குருநாதராகக் கொண்டு அந்த மகானுடைய திருப்பணிக்கே தமது சொத்துக்களை யெல்லாம் அர்ப்பணம் செய்தார். இவருடைய பக்திச் செல்வத்தின் பெருமையைக் கண்டு ராஜாஜி பரவசமடைந்தார் என்றால் வேறு என்ன சொல்ல வேண்டும்! ஸ்ரீ நாகரத்தினத்தின் பக்தி பூர்வமான கோரிக்கையை மறுக்க முடியாமல் சென்ற வருஷம் திருவையாற்றில் நடந்த ஸ்ரீ தியாகராஜ மஹோத்ஸவத்துக்கு ராஜாஜி புதுடில்லியிலிருந்து விஜயம் செய்திருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கக் கூடும்.

உத்தியோகத் துறையில், ஸூபரின்டெண்டிங் என்ஜினியர் என்னும் பெரிய பதவி வகித்துப் புகழுடன் விளங்கிய ஸ்ரீ ராமசந்திரம் நம்மை விட்டுப் பிரிந்து சென்றார். இவர் ஸ்ரீ டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரியாரின் மருமகர். நிர்வாகத் திறமை பெரிதும் வாய்ந்தவர். அருமை மனைவியையும் செல்வக் குமாரனையும் குமாரிகளையும் மற்றும் உற்றார் உறவினர் பலரையும் தவிக்கவிட்டு ஒரு நாள் அகால மரணம் அடைந்து விட்டார்.

ஹிந்து தர்மக் கொள்கைகளின்படி உண்மையில் மரணம் என்பது கிடையாது. உடல்தான் மாய்கிறதே தவிர, ஆன்மா அழிவற்றது. ஆகையால், "காலமானார்கள்" என்று கருதப்படுகிறவர்கள் உண்மையில் நம்முடன் இருக்கத்தான் செய்கிறார்கள். இதை அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டுதான் நாம் ஆறுதல் அடைய வேண்டும். சென்றவர்களைத் திரும்ப அழைத்து வர வேறு வழி என்ன இருக்கிறது!

**அட்டைப்பட விளக்கம்**

# ஜொலிக்கும் நட்சத்திரம்

★ ★ ★

கலை உலகத்தில் கருத்து வேற்றுமைகள் அதிகம் உண்டு. ஸினிமா உலகத்தில் அபிப்பிராய ஒற்றுமையைக் காண்பது அரிது. ஒரு ரஸிகர் முதல் தரப்படமாகக் கருதுவதை இன்னொரு ரஸிகர் "குப்பை!" என்பார். எல்லா ரஸிகர்களும் சேர்ந்து "அபாரமான படம்" என்று பாராட்டுவதைப் பாமர மக்கள் திரும்பிப் பார்க்கவும் மறுத்து விடுவார்கள். ஒருவர் கண்ணுக்கு ஸினிமா வானத்தில் கோடி சூரியப் பிரகாசமாகச் சுடர் விட்டு ஒளிரும் நட்சத்திரம் இன்னொருவர் கண்ணுக்கு வெறும் இருட்டடிப்பாகக் காணப்படும்.

தென்னாட்டைப் பொறுத்த வரையில் ஸினிமாக் கலைத் துறையில் எவ்வித அபிப்பிராய பேதத்துக்கும் இடமின்றி ஒப்புக் கொள்ளப்படும் விஷயம் ஒன்று உண்டு. அது, சித்தூர் ஸ்ரீ வி. நாகையா தென்னாட்டின் தலை சிறந்த குணச்சித்திர நடிகர் என்பதுதான்.

சென்னை மாகாணத்தில் ஸினிமாத் தொழிலில் பல்வேறு துறைகளைச் சேர்ந்தவர்களும் ரஸிகர்களின் பிரதிநிதிகளும் அடங்கிய 'பிலிம் அகாடமி' ஸ்தாபனத்தைச் சென்னை அரசாங்கத்தார் அமைத்திருக்கிறார்கள். இக்கழகத்தின் தலைவர் சென்னை சர்வ கலாசாலை உப அத்யட்சகர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார். மேற்படி பிலிம் அகாடமியார் 1950-ம் வருஷத்தில் தயாரித்துத் திரையிடப்பட்ட பேசும் படங்களில் "ஏழை படும்பாடு" என்ற தமிழ்ப் படத்தைச் சிறந்த படம் என்று தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அப்படத்தில் நடித்த ஸ்ரீ நாகையாவைப் புருஷ நடிகர்களில் சிறந்தவர் என்றும் முடிவு செய்திருக்கிறார்கள். இந்த முடிவைச் சென்னை சர்க்கார் ஏற்றுக் கொண்டு படத்துக்கும் நடிகருக்கும் பரிசுகள் வழங்க ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

ஸினிமா விசிறிகள் சங்கம் நடத்திய தேர்தல் முடிவின்படி 1951—52ம் வருஷத்துச் சிறந்த தமிழ் நடிகராகவும் தெலுங்கு நடிகராகவும் ஸ்ரீ நாகையாவே தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

ஏறக்குறைய சென்ற பத்து ஆண்டுகளாக ஸ்ரீ வி. நாகையா இத்தகைய சிறப்பைப் போட்டியின்றி வகித்து வருகிறார். வட இந்தியாவில் ஸ்ரீ பிரிதிவிராஜ் எப்படி ஸினிமா உலகில் குற்றமற்ற நடிக நட்சத்திரமாக விளங்கி வருகிறாரோ அது போலத் தென்னாட்டில் ஸ்ரீ நாகையா ஸினிமா வானத்தில் ஒளி மிகுந்த நட்சத்திரமாக ஜொலித்து வருகிறார். அவருடைய நடிப்புத் திறன் மிக உயர்ந்தது. தாம் ஏற்றுக் கொண்ட பாத்திரத்துக்கு ஏற்ப நடிப்பதில் ஸ்ரீ நாகையாவுக்கு இணை நாகையாவேதான்.

ஸ்ரீ நாகையா ஸினிமாக் கலையையும் தொழிலையும் பற்றி மிக உயர்ந்த கருத்துக்களைக் கொண்டவர். "ஆபாசக் காட்சிகள் உள்ள படங்களையே மக்கள் விரும்புகிறார்கள்" என்ற கொள்கையைத் தீவிரமாகக் கண்டிப்பவர். பேசும் படங்களின் தரத்தை உயர்த்துவதற்குப் பெரிதும் பாடுபட்டு வருகிறவர். பேசும் படங்கள் கீழ்த்தரமாவதற்குக் காரணம் படாதிபதிகளே என்பதைத் தாட்சண்யமின்றி அவ்வப்போது அவர் வற்புறுத்திக் கூறி வந்திருக்கிறார்.

ஸ்ரீ வி. நாகையா தம் சொந்தப் பொறுப்பில் ஒரு படம் எடுத்தார். அதைத் தமது கொள்கைகளுக்கு இணங்க உயர்தரப் படமாக அமைத்தார். மகான் ஸ்ரீ தியாகராஜரின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் அத்தெலுங்குப் படத்தில் ஸ்ரீ தியாகராஜர் பாத்திரத்தைத் தாமே ஏற்று அற்புதமாக நடித்திருக்கிறார். அந்தப்படம் தென்னாட்டுக் கலைப் பண்பாட்டின் சிறந்த உதாரணமாக விளங்கியது.

இப்படிப் பொது மக்களாலும் சர்க்காராலும் பாராட்டப் பெற்ற ஸ்ரீ நாகையா அவர்களின் உருவப்படத்தையும், 1950-ம் வருஷத்துச் சிறந்த படமாக 'பிலிம் அகாடமி'யாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட "ஏழை படும்பாடு" என்ற படத்தில் ஸ்ரீ நாகையா ஏற்று நடித்த சில அருமையான காட்சிகளையும் இந்த வாரத்துக் "கல்கி" அட்டை தாங்கி மிளிர்கிறது.



# பொன்னியின்

### அத்தியாயம் 30

## இரு சிறைகள்

**வா**னதியை விட்டுப் பிரிந்ததும் அரசிளங்குமரி நேரே பழையாறைச் சிறைச்சாலைக்குச் சென்றாள். காவலர்களை வெளியிலேயே நிறுத்தி விட்டுத் தான்மட்டும் வந்தியத்தேவன் அடைபட்டிருந்த இடத்துக்குப் போனாள். அவன் தனி அறையில் பூட்டப்பட்டிருந்தான். சிறையின் உச்சி மோட்டைப் பார்த்துக் கொண்டு உற்சாகமாகத் தெம்மாங்கு பாடிக் கொண்டிருந்தான்.

> "வானர்கடர்கள் எல்லாம்
> மானே உந்தனைக்கண்டு
> மேனி சிலிர்த்ததடி—
> மெய்மறந்து நிற்குதடி!"

குந்தவை அருகில் வந்து நின்று தொண்டையைக் கனைத்த பிறகு தான் அவனைத் திரும்பிப் பார்த்தான். உடனே எழுந்து நின்று, "வருக! வருக! இளவரசியே! வருக! ஆசனத்தில் அமருக!" என்று உபசரித்தான்.

"எந்த ஆசனத்தில் அமரட்டும்?" என்று இளவரசி கேட்டாள்.

"இது தங்கள் அரண்மனை. இங்கு நடப்பது தங்கள் ஆட்சி; தங்கள் ஆணை. இங்குள்ள சிம்மாசனம் எதில் வேண்டுமானாலும் தங்கள் விருப்பம்போல் அமரலாம்!" என்றான் வல்லவரையன்.

"ஐயா! உமது முன்னோர்கள் ஆணை செலுத்தி மூவுலகையும் ஆண்டபோது வல்லத்து அரண்மனை இவ்விதந்தான் இருந்தது போலும். எங்கள் நகரில் இந்த இடத்தைச் சிறைச்சாலை என்று சொல்லுவார்கள்" என்றாள் இளவரசி.

"அம்மணி! எங்கள் ஊரில் இப்போது அரண்மனையும் இல்லை; சிறைச்சாலையும் இல்லை. பல தேசத்து அரசர்களுமாகச் சேர்ந்து அரண்மனை, சிறைச்சாலை எல்லாவற்றையும் இடித்துத் தரை மட்டமாக்கி விட்டார்கள். நூறு வருஷங்களுக்கு முன்பு!......"

"ஏன்? ஏன்? வல்லத்து அரண்மனை மீதும் சிறையின் பேரிலும் அவர்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?"

"எல்லாம் ஒரு கவிஞரால் வந்தவினை!"

"ஆ! அது எப்படி?"

"என் குலத்து முன்னோர்கள் தென்னாட்டின் பேரரசர்களாக அரசு புரிந்த நாளில், காலாகாலத்தில் கப்பம் செலுத்தாத அரசர்களை அதிகாரிகள் சிறைப் பிடித்துக் கொண்டு வருவார்கள். அரண்மனை முற்றத்தின் இரு புறத்திலும் அந்த அரசர்களை அடைத்து வைக்கும் சிறைகள் இருந்தன. சக்கரவர்த்தி கருணைபுரிந்து எப்போது தங்களை வரும்படி சொல்லி அனுப்புவார், மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஊருக்குத் திரும்பலாம் என்று அச் சிற்றரசர்கள் காத்திருப்பார்கள். பேரரசரைக் காணும் பேறு அவர்களுக்கு எளிதிலே கிட்டாது. அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கவிஞர்களும் புலவர்களும் சக்கரவர்த்தியின் ஆஸ்தான மண்டபத்துக்குப் போவார்கள். சக்கரவர்த்தி முன்னிலையில் பாடல்களைச் சொல்லிப் பரிசுகள் பெற்றுக் கொண்டு திரும்பிச் செல்லுவார்கள். அப்போது




# செல்வன்

சிறையில் காத்திருக்கும் சிற்றரசர்கள், 'அடாடா! இந்தப் புலவர்களுக்கு வந்த யோகத்தைப் பார்! இவர்கள் கொண்டு போகும் பரிசுகளைப் பார்!' என்று சொல்லி வியப்பார்கள். 'ஓகோ! இந்தப் புலவன் கொண்டு போவது என் வெண் கொற்றக் குடையல்லவா!' என்பான் ஒரு அரசன். 'அடடா! இந்தக் கவிஞன் என் சிவிகையில் அமர்ந்து போகிறானே!' என்பான் இன்னொரு வேந்தன். 'ஐயோ! என் பட்டத்து யானையை இவன் கொண்டு போகிறானே!' என்பான் இன்னொரு மன்னன். 'இது என் குதிரை! இந்தக் கவிராயனை என் குதிரை கட்டாயம் ஒருநாள் கீழே தள்ளிவிடும்!' என்று சொல்லி மகிழ்வான் வேறொரு சிற்றரசன். எல்லாப் புலவர்களுக்கும் கடைசியில் இன்னொரு புலவர் வந்தார். அவர் சிறையிலிருந்த சிற்றரசர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டார். கேட்டுக் கொண்டே சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்குச் சென்று இந்தப் பாடலைச் சொன்னார்.

'என்கவிகை என்சிவிகை
என்கவசம் என்துவசம்
என்களிறீது என்பரியீது
என்பரால்—பன்கவரை
மாவேந்தன் வாணன்
வரிசைப் பரிசு பெற்ற
பாவேந்தரை வேந்தர்
பார்த்து!'

இவ்விதம் அந்தப் புலவர் பாடிய பாடல் தமிழ் நாடெங்கும் அப்பாலும் பரவி விட்டது. மக்கள் அடிக்கடி பாடியும் கேட்டும் மகிழ்ந்தார்கள். இதனால் எங்கள் இராஜ்யத்துக்கே ஆபத்து வந்து விட்டது. எல்லா அரசர்களுமாகச் சேர்ந்து வந்து படையெடுத்து எங்கள் ஊரையும், அரண்மனையையும், சிறைச்சாலையையும் எல்லாவற்றையும் அழித்து விட்டார்கள்..."

"எல்லாவற்றையும் அழித்தாலும் அந்தக் கவியின் பாடலை அழிக்க முடியவில்லையல்லவா? உங்கள் குலம் பாக்கியம் செய்த குலந்தான்! அதன் புகழ் என்றும் நிலைத்து நிற்கும்!"

"வாணர் குலத்தின் வீரப் புகழைக் கெடுக்க நான் ஒருவன் இப்போது ஏற்பட்டிருக்கிறேன்..."

"ஆகா! அந்த உண்மையை நீரே ஒப்புக் கொள்கிறீர் அன்றோ?"

"ஒப்புக் கொள்ளாமல் வேறு என்ன செய்வது? அடிமைத் தனங்களுக்குள்ளே பெண்ணடிமை மிகப் பொல்லாதது. ஒரு பெண்மணியின் வார்த்தையைக் கேட்கப் போய், என் முன்னோர்களின் குலப் புகழுக்கு நான் மாசு தேடிக்கொள்ள நேர்ந்தது. ஓடி ஒளிந்து மறைந்து திரிந்து உயிர் வாழ நேர்ந்தது. என் கோபத்தையெல்லாம் அந்த வைத்தியர் மகனைக் கொன்று தீர்த்துக் கொள்ளலாம் என்று பார்த்தேன். அதற்கும் ஒரு தடை வந்து குறுக்கிட்டு விட்டது..."

"ஐயா! வைத்தியர் மகன் பினாகபாணி மீது உமக்கு ஏன் அவ்வளவு கோபம்?"

"கோபத்துக்கு வேண்டிய காரணம் இருக்கிறது. நல்ல ஆளைப் பிடித்து என்னோடு கோடிக் கரைக்கு

கல்கி

அனுப்பினீர்கள். அவன் என் காரியத்தையே கெடுத்துவிட இருந்தான். அது போகிற தென்றால், சற்று முன் இந்த ஊர் வீதியில் அவன் என்னைப் பகைவர்களின் ஒற்றன் என்று சொல்லிப் பழுவேட்டரையர்களிடம் பிடித்துக் கொடுக்கப் பார்த்தான். அங்கிருந்து தப்பி வந்தால், அரண்மனை முற்றத்தில் ஆயிரம் பதினாயிரம் பேருக்கு எதிரில் என்னைப் 'பழுவூர் ராணியின் ஒற்றன்' என்று அவன் குற்றம் சாட்டினான்......''

''வல்லத்து இளவரசரே! அது உண்மை யல்லவா?''

''எது உண்மை அல்லவா?''

''நீர் பழுவூர் ராணி நந்தினி தேவியின் ஒற்றன் என்று பினாகபாணி குற்றம் சாட்டியதைக் கேட்கிறேன். உண்மையைச் சொல்வீரா?''

''நான் உண்மை சொல்லுவதில்லையென்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறேன், தேவி!''

''ஆகா! அது என்ன விரதம்? அரிச்சந்திர நதிக்கரையில் பழுவூர் ராணியைப் பார்த்ததிலிருந்து அப்படிப்பட்ட விரதம் எடுத்துக் கொண்டீரா!''

''இல்லை, இல்லை! அதற்கு முன்னாலேயே அந்த முடிவுக்கு வந்து விட்டேன். நான் உண்மைக்கு மாறானதைச் சொல்லிக் கொண்டிருந்த வரையில் எல்லாரும் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஓரிடத்தில் வாய் தவறி 'இளவரசர் நாகைப் பட்டினத்தில் பத்திரமாயிருக்கிறார்' என்று சொன்னேன். ஒருவரும் நம்பவில்லை. கேட்டவர்கள் எல்லாரும் சிரித்தார்கள்...''



''எவ்வளவு தவறான காரியத்தைச்செய்தீர்? உம்முடைய வார்த்தையை அவர்கள் நம்பாததே நல்லதாய்ப் போயிற்று; நம்பியிருந்தால் எவ்வளவு பிசகாகப் போயிருக்கும்?''

''இனிமேல் எப்போதும் இத்தகைய தவறுகள் நேரவே நேராது......''

''உமது வாக்குறுதிக்கு மிக்க நன்றி.''

''என்ன வாக்குறுதி கொடுத்தேன்?''

''இனிமேல் தவறு எதுவும் நேராமல் நான் இட்ட காரியத்தைச்செய்வதாக...''

''கடவுளே! அப்படி நான் ஒன்றும் வாக்குறுதி கொடுக்கவில்லை. போதும்! போதும்! என்னை இந்தச் சிறையிலிருந்து விடுதலை செய்து விடுங்கள்! என் வழியே போகிறேன்......''

''அப்படியானால், உமக்கு விடுதலை கிடையாது. இந்தச் சிறையிலேயே நீர் இருந்து வர வேண்டியதுதான்'' என்றான்.

வந்தியத்தேவன் கலகலவென்று சிரித்தான்.

''நீர் எதற்காகச் சிரிக்கிறீர்? நான் சொல்லுவது வேடிக்கை என்றா?''

"இல்லை, தேவி! இந்தச் சிறையிலிருந்து தாங்கள் என்னை விடுதலை செய்யாவிட்டால், நான் இதிலிருந்து தப்பிச் செல்ல முடியாதா?"

இளவரசி ஒரு கணம் வந்தியத்தேவனைத் தன் மலர்ந்த கண்களினால் உற்றுப் பார்த்து விட்டு, "ஐயா! நீர் கெட்டிக்காரர். அதிலும் சிறையிலிருந்து தப்பிச் செல்வதில் மிகக் கெட்டிக்காரர். பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையிலிருந்து தப்பிச் சென்றவருக்கு இது ஒரு பிரமாதமா?" என்றாள்.

"அப்படியானால், நீங்களே கதவைத் திறந்து என்னை விடுதலை செய்யுங்கள்."



"நானே இந்தச் சிறையைத் திறந்து விடலாம், அல்லது நீரும் தப்பிச் செல்லலாம். ஆனால் இன்னொரு சிறைச் சாலையிலிருந்து நீர் தப்ப முடியாது......"

"சின்னப் பழுவேட்டரையரின் பாதாளச் சிறையைச் சொல்கிறீர்களா?"

"இல்லை; அதுவும் உமக்கு இலட்சியமில்லை. பாதாளச் சிறை வாசலில் காத்திருக்கும் புலிகளையும் வென்றுவிட்டுத் தப்பிச் சென்று விடுவீர்......"

"பின்னே, எந்தச் சிறையைச் சொல்லுகிறீர்கள்?"

"என்னுடைய இதயமாகிற சிறைச் சாலையைத்தான் சொல்கிறேன்."

"தேவி! நான் வீடு வாசல் அற்ற அநாதை. என்னுடைய குலப்பெருமையெல்லாம் பழைய கதை; கவிஞர் கற்பனை. தாங்களோ, மூன்று உலகையும் ஒரு குடை நிழலில் ஆளும் சக்கரவர்த்தியின் செல்வக் குமாரி......"

"யார் கண்டது? இந்தச் சோழ குலத்தின் பெருமையும் ஒரு நாள் பழைய கதை ஆகலாம்."

"ஆயினும், இன்றைக்குத் தாங்கள் இந்நாட்டில் இணையற்ற அதிகாரம் படைத்தவர். சக்கரவர்த்தியும் பழுவேட்டரையர்களும் முதன் மந்திரியும் தங்கள் விருப்பத்துக்கு மாறாக நடக்கத் துணிய மாட்டார்கள்......"

"இதெல்லாம் உண்மையாயிருந்தால், நீர் மட்டும் எவ்விதம் என் அதிகாரத்தை மீற முடியும்?"

"அரசாங்க அதிகாரம் வேறு விஷயம். தாங்கள் நெஞ்சின் அதிகாரத்தையல்லவா குறிப்பிட்டீர்கள்?"

"அதிலேதான் என்ன தவறு?"

"நம் இருவருக்கும் அந்தஸ்திலே உள்ள வித்தியாசம்தான் தவறு......"

"'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்ற முதுமொழியைக் கேட்டதில்லையா?"

"அந்த முதுமொழி பொன்னியின் செல்வருக்கும் படகுக்காரி பூங்குழலிக்கும் கூடப் பொருந்துமல்லவோ?"

"ஆம்; பொருந்துந்தான்! என் தம்பி உலகமாளப் பிறந்தவன் என்று நினைத்தேன். அதனால் அவர்களுடைய நெஞ்சுக்கும் தாளிட விரும்பினேன்......"

"நானும் இளவரசரைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டு விட்டுத்தான் ஆவலுடன் வந்தேன். அவரோடு எட்டுத் திசைகளுக்கும் சென்று போர்க்களங்

களில் வீரச் செயல்கள் புரிந்து பெயரும் புகழும் அடைய விரும்பினேன்......"

"இப்போது அந்த ஆசை போய்விட்டதல்லவா?"

"ஆம்; பொன்னியின் செல்வர் அரசுரிமையைக் காட்டிலும் அமைதியான வாழ்க்கையை அதிகம் விரும்புகிறார். போர்க்களத்தில் வீர வாளேந்தி விசுவதைக் காட்டிலும் ஆலயத் திருப்பணியில் கல்லுளி கொண்டு வேலை செய்வதற்கு அதிகம் ஆசைப்படுகிறார்......"

"மதுராந்தகனோ இராஜ்யம் ஆளுவதில் தீவிர நோக்கம் கொண்டிருக்கிறான். ஆடு புலி ஆக மாறுகிறது; புலி ஆடாகிறது. ஆலவாய் இறைவன் நரியைப் பரியாக்கிப் பரியை நரியாக்கியதாகச் சிவபக்தரின் வரலாறு கூறுகிறது. அதுபோல்......"

"தேவி! தங்களுடைய கருணையினால் நானும் ஒரு நரியானேன். ஒளிந்தும் மறைந்தும் தந்திர மந்திரம் செய்தும் இல்லாதது பொல்லாததைச் சொல்லியும் பகைவர்களிடமிருந்து தப்பி வர வேண்டியதாயிற்று. அரசிளங் குமரி! இந்த வேலை இனிச் செய்ய என்னால் முடியாது! விடை கொடுங்கள்..."

"ஐயா! என் பிராண சிநேகிதி என்று எண்ணியிருந்த வானதி என்னைக் கைவிட்டுப் போகப் பார்க்கிறாள். நீருமா என்னைக் கைவிட்டுப் போய்விட எண்ணுகிறீர்?"

"தேவி! கொடும்பாளூர் இளவரசிக்கும் தங்களுக்கும் உள்ள விவகாரத்தைப் பற்றி நான் அறியேன். ஆனால் நான் எப்படித் தங்களைக் கைவிட முடியும்? இராஜாதி ராஜாக்கள் தங்களுடைய மணிப் பொற் கரத்தைக் கைப்பற்றத் தவம் கிடக்கிறார்கள். நானோ குற்றேவல் செய்ய வந்தவன்..."

இளைய பிராட்டி அப்போது தன்னுடைய திருக் கரத்தை நீட்டினாள். இது கனவா, நனவா என்ற தயக்கத்துடன் வந்தியத்தேவன் அந்த மலர்க் கரத்தைத் தன் இரு கைகளாலும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அவனுடைய உள்ளமும் உடம்பும் பரவசமடைந்தன.

"வாணர் குலத்து வீரரே! கற்பென்னும் திண்மையைக் குலதனமாகப் பெற்ற பழந் தமிழ் மன்னர் வம்சத்தில் வந்தவள் நான். எங்கள் குலத்து மாதரில் சிலர் கணவனுடன் உடன்கட்டை ஏறியதுண்டு. பதியின் உடலை எரித்த தீயைக் குளிர்ந்த நிலவென்று அவர்கள் கருதி அக்கினியில் குதித்தார்கள்!"

"கேள்விப்பட்டிருக்கிறேன், தேவி!"

"உமது கரத்தைப் பற்றிய இந்த என் கரம் இன்னொரு ஆடவனுடைய கையை ஒரு நாளும் பற்றாது..."

வல்லவரையன் சொல்லிழந்து செயலிழந்து குந்தவையின் கண்ணீர் ததும்பிய கண்களைப் பார்த்த வண்ணம் மதியும் இழந்து நின்றான்.

"ஐயா! உம்முடைய பதட்டமான காரியங்களினால் உமது உயிருக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்தால் என்னுடைய கதி என்ன ஆகும் என்பதைச் சிறிது எண்ணிப் பாரும்."

"தேவி! தங்களுடைய இதய சிங்காதனத்தில் இடம் பெற்ற இந்தப் பாக்கியசாலி உயிருக்குப் பயந்த கோழையாயிருக்க முடியுமா?"

"கோழைத்தனம் வேறு, ஜாக்கிரதை வேறு, ஐயா! முதன் மந்திரி அநிருத்தருக்குக் கூடத் தங்கள் வீரத்தைப் பற்றி ஐயம் கிடையாது."

"பின்னர், எதைப் பற்றி அவர் ஐயப்படுகிறார்..."

"நீர் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் என்று ஐயுறுகிறார்......"

"அப்படியானால், வைத்தியர் மகன் பினாகபாணிக்கு அளித்த மறுமொழியை அவருக்கும் அளிக்கச் சித்தமாயிருக்கிறேன். சிறைக் கதவைத் திறவுங்கள்; அந்த மனிதர் எங்கே இருக்கிறார் என்று சொல்லுங்கள்."

"வைத்தியர் மகனாவது மற்போரில் சிறிது பழக்க முள்ளவன்; அநிருத்தர் சொற்போர் அறிவாரே யன்றி மற்போர் அறியார். அறிவின் கூர்மையே அவருடைய ஆயுதம்; வாளின் கூர்மையை அவர் என்றும் துணைகொண்டதில்லை..."

"அப்படியானால், என்னுடைய வாளின் கூர்மையைத் தான் முதன் முதலில் பரீட்சை பார்க்கட்டுமே?"

"ஐயா! இந்த நாட்டில் சக்கரவர்த்திக்கு அடுத்த மரியாதைக் குரியவர் முதன் மந்திரி அநிருத்தர். அவருடன் பகிரங்கமாக முரண்படப் பழுவேட்டரையர்களும் தயங்குகிறார்கள்......"

"பழுவேட்டரையர்கள் குற்றம் உள்ள நெஞ்சினர். அவர்கள் பயப்படுவார்கள். நான் ஏன் பயப்பட வேண்டும்?"

"இளம் பிராயத்திலிருந்து என் தந்தையின் உற்ற தோழர் அவர். முதன் மந்திரிக்குச் செய்த அவமரியாதை சக்கர

வர்த்திக்கும் எனக்கும் செய்த அவமரியாதையாகும்."

"அப்படியானால், அவருடைய நம்பிக்கையை நான் பெறுவதற்கு வழியையேனும் சொல்லுங்கள்."

"முதன் மந்திரி காஞ்சிக்கு மிகவும் நம்பிக்கையான ஒருவரை அனுப்ப விரும்புகிறார். உம்மை அனுப்பலாம், நம்பி அனுப்பலாம் என்று நான் அவருக்கு உறுதி அளித்திருக்கிறேன்."

"தேவி! காஞ்சிக்கு என்னை அனுப்பாதீர்கள்! என் மனத்திற்குள் ஏதோ ஒரு குரல் 'காஞ்சிக்குப் போகாதே!' என்று சொல்லிக்கொண்டிருக்கிறது."

"அது ஒருவேளை பழுவூர் இளைய ராணியின் குரலாயிருக்கலாம் அல்லவா?"

"இல்லவே இல்லை! தங்களுடைய சொல்லுக்குமாறாக அந்த விஷ நாகத்தின் குரலை நான் கேட்பேனா?"

"ஐயா! பழுவூர் இளைய ராணியைப் பற்றி இனி எந்த சமயத்திலும் அப்படியெல்லாம் பேசாதீர்கள்!"

"இது என்ன? ஏன் இந்த திடீர்மாறுதல்!"

"ஆம்; என் மனம் அவள் விஷயத்தில் அடியோடு மாறி விட்டது. நீர் இலங்கையிலிருந்துகொண்டுவந்த செய்தியைக் கேட்டபிறகு."



ராயப்பேட்டையிலுள்ள அரசாங்க ஆஸ்பத்திரியின் தலைவர் டாக்டர் பி. ஆர். கலியாணசுந்தரம் அவர்களின் செல்வப் புதல்வி சௌபாக்கியவதி ஸ்ரீலக்ஷ்மிக்கும் கள்ளிக்கோட்டை அட்வகேட் ஸ்ரீ வி. கோபாலகிருஷ்ணையர் அவர்களின் குமாரர் ஸ்ரீ ஜி. வெங்கடேசுவரன், I. A. F. அவர்களுக்கும் மே மாதம் 19உ. கீழ்ப்பாக்கம் கெனரோஜி தோட்டத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. முகூர்த்தத்துக்கும் மாலையில் நடந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரிக்கும் சென்னை நகரையும் வெளி இடங்களையும் சேர்ந்த பிரமுகர்கள் பலர் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். திருமணத்தன்று சென்னையில் மழை தொடங்கியதால், வருண பகவானும் இத் திருமணத்துக்கு விஜயம் செய்ததாகக் கருதி அனைவரும் களி கூர்ந்தார்கள்.

"அப்படியானால் இனி நான் பழுவூர் இளைய ராணியிடமும் பயபக்தியுடன் நடந்து கொள்ள வேண்டியதுதானே!"

"ஆம்!"

"அவள் பக்தியுடன் பூஜை செய்யும் கொலை வாளை என்னிடம் கொடுத்து 'இன்னாருடைய தலையைக் கொண்டுவா!' என்று சொன்னாலும் கொண்டு வர வேண்டியது தானே?"

குந்தவை தேவியின் உடம்பு நடுங்கிற்று. மறுமொழி கூறியபோது அவளுடைய குரலும் நடுங்கிற்று.

"பழுவூர் ராணியிடம் மரியாதையுடன் நடந்துகொள்ள வேண்டியதுதான். ஆனால் அவள் பேச்சைக் கேட்க வேண்டிய அவசியமில்லை. அவள் எத்தகைய காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பது அவளுக்கே தெரியாமலிருக்கலாம் அல்லவா?"

"அப்படித்தான் அவளும் கூறினாள். 'நான் எதற்காக இந்தக் கத்தியைப் பூஜை செய்து கொண்டிருக்கிறேன் என்பது எனக்கே தெரியவில்லை' என்றாள்."

இதைக் கேட்ட இளவரசி இன்னும் அதிகமாக நடுங்கிய குரலில், "இந்தச் சோழர் தொல்குடியைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும்" என்றாள்.

"காப்பாற்றுகிற தெய்வம் இந்த ஏழையைச் சாதனமாக வைத்துக் கொண்டு காப்பாற்றட்டும்" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! நானும் அவ்வாறுதான் நம்பியிருக்கிறேன். நீர் காஞ்சியிலிருந்து

திரும்பி வந்ததும் மறுபடி ஒரு தடவை இலங்கைக்குப் போக வேண்டும். அந்த ஊமைத் தாயை எப்படியாவது இங்கே அழைத்து வர வேண்டும்......"

"அவளை அழைத்து வருவது சுழிக்காற்றைக் குடத்தில் அடைத்துக் கொண்டு வருவது போலத்தான். இப்படி ஒரு முறை யாரோ சொன்னார்கள். ஆம், அந்த வீர வைஷ்ணவன்தான். ஒரு வேளை அவனே அழைத்து வந்திருக்கலாம்."

"இல்லை; அவனால் அந்தக் காரியம் முடியவில்லை. உம்மாலேதான் அந்தக் காரியம் ஆகவேண்டும்."

"அப்படியானால் என்னைக் காஞ்சிக்கு அனுப்பாதீர்கள், தேவி!"

"ஏன்?"

"அங்கே என் எஜமானர் இருக்கிறார். அவர் கேட்டால் நான் எல்லா விவரங்களையும் சொல்லித்தான் ஆக வேண்டும். பழுவேட்டரையர்களும் மற்றச் சிற்றரசர்களும் செய்யும் சதியைப் பற்றி அறிந்தால் உடனே வெகுண்டு எழுவார். சக்கரவர்த்தியைச் சிறை வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார்கள் என்று அறிந்தால் உடனே படை எடுத்துக் கிளம்புவார். பொன்னியின் செல்வரைப் பற்றிய செய்தி அவர் காதில் எட்டியிருந்தால் இதற்குள்ளேயே ஒருவேளை புறப்பட்டிருந்தாலும் புறப்பட்டிருப்பார்..."

"அதற்காகவே தான் உம்மை அனுப்ப விரும்புகிறேன். அவர் காஞ்சியை விட்டுப் புறப்படாமல் எப்படியாவது தடுத்து விட வேண்டும்."

"நான் காஞ்சியை அடைவதற்குள் அவர் புறப்பட்டிருந்தால்?......"

"வழியில் அவன் எங்கே இருந்தாலும் அங்கே போய்ச் சேர்ந்து கொள்ளுங்கள். எல்லாவற்றையும் விட முக்கியமாக நீர் அவசியம் செய்ய வேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது......"

"சொல்லுங்கள்!"

"பெரிய பழுவேட்டரையர் இளைய ராணியுடன் கடம்பூர் மாளிகைக்குப் புறப்பட்டு விட்டார் என்ற செய்தி கிடைத்திருக்கிறது......"

"உண்மையில் இளைய ராணிதான் போகிறாளா! அல்லது இளைய ராணியின் பல்லக்கில்..."

"இல்லை; இளைய ராணிதான் போகிறாள். என் சித்தப்பா தான் இன்னும் இங்கே இருக்கிறாரே?"

"எதற்காகப் போகிறார்களாம்?"

"ஆதித்த கரிகாலனையும் கடம்பூருக்கு வரும்படி அழைத்திருக்கிறார்கள். கலியாணப் பேச்சு என்பது வெளிப்படையான காரணம். இராஜ்யத்தை இரண்டாகப் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்து வைக்கப் போவதாகவும் ஒரு பேச்சு நடந்து வருகிறது."

"என் எஜமானர் அதற்கு ஒருநாளும் சம்மதிக்க மாட்டார்."

"அதைப் பற்றியெல்லாம் இப்போது எனக்குக் கவலை இல்லை."

"பின்னே; என்ன கவலை தேவி!"

"இன்னதென்று சொல்ல முடியாத பயம் என் மனத்தில் குடிகொண்டிருக்கிறது. நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொள்கிறது. அரைத் தூக்கத்தில் விவரமில்லாத பயங்கரங்கள் என்னைச் சூழ்ந்து கொள்கின்றன. நல்ல தூக்கத்தில் அகோரமான கனவுகள் கண்டு விழித்துக் கொள்கிறேன். அப்புறம் வெகுநேரம் வரையில் என் உடம்பு நடுங்கிக் கொண்டிருக்கிறது."

"இந்த நிலையில் தங்களைப் பிரிந்து என்னை ஏன் போகச் சொல்லுகிறீர்கள்? தங்களுக்கு எத்தகைய அபாயம் வந்தாலும் என் உயிரைக் கொடுத்து......"

"ஐயா! என்னுடைய பயம் என்னைப் பற்றியதே அன்று. என் தமையனைப் பற்றியது; பழுவூர் இராணியைப் பற்றியது. அவர்கள் சந்தித்தால் என்ன நேரிடுமோ என்று எண்ணி என் உள்ளம் கலங்குகிறது. அவர்கள் தனியாகச் சந்திக்க முடியாதபடி நீர் தடை செய்ய வேண்டும்......"

"தேவி! அவர் ஒன்று செய்வதற்கு நினைத்தால் அதை யார் தடுக்க முடியும்?"

"ஐயா! என் தமையனைக் காப்பாற்றும் இரும்புக் கவசம்போல் நீர் உதவ வேண்டும். அவசியமானால் நந்தினி யார் என்பதை என் சகோதரனிடம் சொல்லி விட வேண்டும்......"

"அதை அவர் நம்ப வேண்டுமே?"

"நம்பும்படியாகச் செய்வது உமது பொறுப்பு. எப்படிச் செய்வீர் என்று எனக்குத் தெரியாது. அவர்களை எப்படியேனும் சந்திக்க முடியாதபடி செய்தால் மிக்க நலமாயிருக்கும்."

"தேவி! என்னாலியன்ற முயற்சிகளைச் செய்து பார்க்கிறேன். தோல்வி அடைந்தால் என்னைக் குற்றம் சொல்ல வேண்டாம்" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! தாங்கள் தோல்வி அடைந்தாலும் வெற்றி அடைந்தாலும் என் இதயச் சிறையிலிருந்து இந்த ஜன்மத்தில் தங்களுக்கு விடுதலை கிடையாது!" என்றாள் அரசிளங் குமரி. (தொடரும்)




நல்ல
சிகரெட்
வாங்க
ஏன்
அதிக விலை கொடுக்கிறீர்கள்

10 விலை 3½ அணா
50 விலை ரூ 1/4
உள்ளூர் வரி அலாதி

ACI Issued by the National Tobacco Co. of India Ltd., Licensees of James Carlton Ltd., London. Cigarettes made in India. N.T.R-4T

# உங்களுக்குகந்த சைகிள்கள்

மொத்த விலையிலும் தவணைகளில் செலுத்தும் சலுகையுடனும் புதிய சைகிள்களை வாங்குங்கள். யாவும் புத்தம்புதியது.

இந்தச் சலுகையை நழுவவிடாது நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். விலையின் 25 சத விகிதம் முன்னதாகவும் பாக்கியை ஐந்து மாதாந்திரத் தவணைகளாகவும் செலுத்தலாம்.

ஹிந்த் சைகிள் ரூ. 155/- இங்கிலீஷ் சைகிள் ரூ. 185/-
பிலிப்ஸ் ரூ. 230/- ஹெர்குலஸ் ரூ. 240/-
பி. எஸ். ஏ. ரூ. 255/- ராலே (பச்சை) ரூ. 365/-



உங்களுக்கு அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரும் முழு விலாசமும் எழுதி நிபந்தனைகளுக் குட்பட்டு உடனேயே டெலிவரி எடுத்துக் கொள்ளுங்கள். புதிய டன்லப் டயர்கள், டியூப்கள், புதிய ஒரிஜினல் பார்ட்டுகள் எல்லாம் புத்தம் புதியவை என்பதற்கு உத்தரவாதம். உடனேயே ஆர்டர் செய்யுங்கள்.

**JUPITER TRADING CO.**
**P.BAG.16602.CALCUTTA-4**




அறிவாளி ! ஸெவன் ஓ'ளொக் ஸ்லாட்டெட் பிளேடுகளினால் தினசரி முகத்தை க்ஷவரம் செய்து கொள்கிறார்.



# ஸெவன் ஓ'ளொக்
## ஸ்லாட்டெட் பிளேடுகள்

முகத்தைச் சுத்தமாக க்ஷவரம் செய்திருப்பது முன்னேற்றத்தின் அறிகுறியாகும். ஆனால் தினசரி க்ஷவரம் செய்து வருதல் அவசியம். நாவிதனைக் கொண்டு க்ஷவரம் செய்வதால் அதிகச் செலவு நேரிடும்.

ஆனால், தினமும் சிக்கனமான முறையில், சுத்தமாக க்ஷவரம் செய்து கொள்வதற்கு ஸெவன் ஓ' ளொக் பிளேடுகள் கிடைத்திருப்பது ஓர் அதிர்ஷ்டமே. ஸெவன் ஓ' ளொக் பிளேடுகள் அதி கூர்மையானவை, சுத்தமாக க்ஷவரம் செய்பவை, நெடுநாள் உழைப்பவை, உண்மையான சிக்கனம் வாய்ந்தவை.

வெற்றியடைந்த, வசீகரத் தோற்றமுடைய, மனிதர்களோடு சேர்ந்து கொள்ளுங்கள் ! தினசரி ஸெவன் ஓ' ளொக் பிளேடுகளினால் க்ஷவரம் செய்யுங்கள்.

# 7 o'clock

ஸெவன் ஓ' ளொக் ஸ்லாட்டெட் பிளேடுகள்




0 ப்ளேடுகள் கொண்ட பாக்கெட் ரூ. 1

68(1) TAM.



# மாமனார்கள்

கோணல்

இந்த உலகத்தில் மாமனாரைப் படைத்த எத்தனை மகானுபாவர்கள் உண்டோ அத்தனை பேருக்கும் என் இருதய பூர்வமான வணக்கம். மனதிற்குகந்த மனைவியை ஒருவர் அடைந்திருந்தால் அது பெருமைப் படக்கூடிய விஷயமல்ல. ஒருவருக்கு மாமனார் வந்து வாய்ப்பதுதான் பெருமையும் மதிப்பும் அளிக்கக்கூடிய பெரிய விஷயம். ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு முன் அவளுடைய குண தோஷங்களை அறிவதை விட அவளுக்குத் தகப்பனார் என்று ஒரு புண்ணியமூர்த்தி இருந்தாரானால் அவரைப் பற்றி ஆரம்பத்திலேயே அறிந்து கொள்வது மகா சிரேஷ்டம்.

மாமனாரில் பல ரகம் உண்டு. இது மாப்பிள்ளையின் குணத்தையும் மாமனாரின் குணத்தையும் பொறுத்த விஷயம். இதில் மகா சூர மாமனார் என்று ஒரு வகை. இவருடைய சூரத்தனமெல்லாம் பிரமாதமாயிருக்கும். இவரிடம் அகப்பட்டுக் கொண்ட மாப்பிள்ளைகளெல்லாம் ஒவ்வொரு விஷயத்திலும் ஏமாற்றமடைந்து கொண்டே இருக்க வேண்டும். மாப்பிள்ளையின் பேரிலோ அல்லது தெய்வத்தின் பேரிலோ அஞ்சாமல் குற்றம் சாட்டி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தம் மதிப்பையும் கௌரவத்தையும் காப்பாற்றிக் கொள்வார். மாப்பிள்ளைகளையெல்லாம் முட்டாளாகவும் பயித்தியக்காரர்களாகவும் செய்யத் துணிகூடத் தயங்க மாட்டார்.

பாவம்! ராஜுவுக்கு வாய்த்தவர் இப்படிப்பட்ட முதல் நம்பர் மாமனார்தான். ஏமாற்று வித்தையில் அசகாய சூரர். இதற்கு ஒரு சிறு உதாரணமே போதும். அவனுடைய மாமனார் ஏதோ ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் அவனுக்குக் கால் பவுன் இரண்டு குண்டுமணி எடையில் ஒரு மோதிரம் வாங்கிக் கொடுத்தார். அவரும் தனக்கு மனது வந்து ஒரு மோதிரம் வாங்கிக் கொடுத்து விட்டார் என்ற பெருமை ராஜுவையே விழுங்கிவிடும் போல் இருந்தது. அந்த மோதிரத்தைப் போட்டுக் கொண்டு விரலை மடக்குவான். பிரிப்பான். மார்பில் கை வைத்துக் கொள்வான். கன்னத்தில் கை வைத்துக் கொள்வான். மோதிரம் போட்டுக் கொண்டிருக்கும் விரலினால் நெற்றியில் விழுந்திருக்கும் மயிரைக் கோதி விடுவான். ஒவ்வொருவரிடமும் மாமனார் மோதிரம் வாங்கிக் கொடுத்த பெருமையைச் சொல்லிக் கொண்டிருப்பான். பாவம்! செய்யாதவர் செய்தால் பெருமைப்பட வேண்டியதுதானே?

ஒரு சமயம் ராஜு மாமனார் வீட்டிற்குப் போயிருந்தபோது அவன் கையில் அணிந்து கொண்டிருந்த மோதிரம் மாமனாரின் கண்ணை உறுத்தியது. அதைக் கொடுத்தது போல் திருப்பி வாங்கிவிட வேண்டும் என்று அவர் தீர்மானித்தார். "என்ன மாப்பிள்ளை! மோதிரம் கொஞ்சம் பெரிசாய் இருக்கும் போலிருக்கே...... விரலிலிருந்து நழுவுகிறது போலிருக்கிறதே! பத்திரம்..." என்றார்.

மோதிரம் ராஜுவின் விரலுக்குச் சரியாகத் தானிருந்தது. இருப்பினும் மாமனாரின் அபிப்பிராயங்களைச் சிறிது ஆமோதிப்பவன் போல், "ஆமாம்! அதனால் பாதகமில்லை. நான் நழுவ விட்டுவிட மாட்டேன்......" என்றான்.

அவன் மோதிரத்தை நழுவ விடுகிறானோ இல்லையோ, ஆனால் அவன் மாமனார் அந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிடுவாரா? "அப்படிச் சொல்லாதீர்கள். ஒரு சமயம் போல் இருக்காது. இது சாதாரண விஷயமில்லை. பவுன் நகை பாருங்கள்! அதைக் கழற்றி இப்படிக் கொடுங்கள். நம்ம பத்தர் கிட்டே கொடுத்துக் கொஞ்சம் சின்னதாகச் செய்து தரச்சொல்கிறேன்......" என்றார்.

கால் பவுன் இரண்டு குண்டுமணி எடையுள்ள மோதிரத்தை இன்னும் சிறிதாக்குவதென்றால்......? ராஜுவுக்கு இதென்னடா தெரியாத்தனமாக ஏதோ பிதற்றி விட்டோமே. விடாக்கண்ட மாமனாராயிற்றே என்ற குழப்பம் ஏற்பட்டது. எப்படியாவது மாமனாரிடமிருந்து மோதிரத்தோடு தப்பினால் போதுமென்று பட்டது. "இல்லை, இதை நானே கல் வைத்த மோதிரமாகச் செய்து போட்டுக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன்" என்று இழுத்தான்.

அவன் என்னமோ புத்திசாலித்தனமாகப் பேசித் தப்பத்தான் நினைத்தான். ஆனால் அந்தப் புத்திசாலித்தனமே அவன் மாமனாருக்கு அவன் கையிலிருந்து மோதிரத்தை வாங்க ஒரு சாதகமான வழி யாகிவிட்டது.

"ஏன்? பேஷாகக் கல் வைத்தே செய்து கொள்ளலாமே...! நானே செய்து தரேன்.

நம்ம பத்தர் தங்கமான மனுஷ்யர். மோதிரத்திலே என்ன கல் வைக்கணும்? வைரமா? வைடூர்யமா? புஷ்பராகமா? நீலமா? பச்சையா...?" என்று நவரத்னங்களையும் வாய் கூசாமல் அடுக்கிக் கொண்டே போனார்.

இவ்வளவு ஆர்வத்தோடு பேசும் மாமனாரின் வார்த்தைகளால் அவன் மனத்தில் சிறிது ஆசை எழும்பியது. மெதுவாக மோதிரத்தைப் பார்த்தான். அப்பொழுதே அதில் நவரத்தினமும் டால் வீசுவது போல் அவன் மனக் கண்ணிற்குப் பட்டது. "நடுவிலே ஒரு நீலக் கல். அதற்கு இரண்டு பக்கத்திலேயும் இரண்டு வெள்ளைக் கல்..." என்றான் மனதிலிருந்த ஆசையை அடக்க முடியாமல்.

"நீலம் என்றால் ஜாதி நீலம்தானே?..." என்றார் மாமனார்.

"ஆமாம்...... !"

"இது என்ன பிரமாதம்? பக்கத்திலே வைக்கிற கல் வைரமா அல்லது..." என்று மாமனார் வார்த்தைகளை முடிப்பதற்குள், "வைரம்தான்! வைரம்தான்!" என்றான் ராஜு பதட்டத்தோடு.

"ரொம்ப சரி. செய்யர் சொல்லிவிட்டால் போயிற்று. மோதிரத்தை இப்படிக் கழற்றிக் கொடுங்கள்" என்று கையை நீட்டினார் மாமனார். பதில் பேசாமல் அவர் கையில் மோதிரத்தைக் கழற்றிக்கொடுத்தான் ராஜு. நடுவில் நீலம் இருபுறமும் வைரம்! மாமனாருக்கு இவ்வளவு தாரான சிந்தை எப்பொழுது ஏற்பட்டது? வைரமும் நீலமும் என்ன விலை பெறும்? ராஜுவுக்கு மோதிரத்தை மாமனாரின் கையில் கொடுத்துவிட்டு வந்ததிலிருந்து ஒரே சொப்பனவஸ்தையாகத்தா னிருந்தது.



ஒரு வாரத்தில் மோதிரத்தைச் செய்து பத்திரமாக அனுப்பிவிடுவதாகச்சொல்லி ராஜுவை ஊருக்கு அனுப்பி விட்டார் மாமனார். ஒருவாரம் ஓடியது. இரண்டு வாரமும் ஓடியது. ராஜுவுக்கு மோதிரத்தைப் பற்றிய சொப்பனவஸ்தை அதிகமாகியது. மோதிரம் வந்தபாடில்லை. மாமனாருக்கு ஒரு கடிதம் எழுதினான், 'மோதிரமில்லாமல் ஆபீஸில் வேலையே ஓடவில்லை' என்று. மாமனாரிடமிருந்து உடனுக்குடன் பதில் வந்தது. மோதிரத்திற்காக நீலக் கல்லும் வைரமும் தேடிக் கொண்டிருப்பதாகவும், கிடைத்தவுடன் தாமதமில்லாமல் மோதிரத்தைச் செய்து அனுப்புவதாகவும் எழுதியிருந்தார். மாமனார் தனக்காக இவ்வளவு சிரமப்பட்டு நீலக் கல்லும் வைரமும் தேடுவதை எண்ணி ராஜுவின் மனம் சொல்லவொண்ணு உவகை எய்தியது. ஜாதி நீலமும், நல்ல வைரமும் கிடைக்காவிட்டால் மாமனார் பத்தரை அழைத்துக் கொண்டு நவரத்தினங்கள் கிடைக்கக் கூடிய சுரங்கங்களி லெல்லாம் கூடப் போய்த் தேடுவார் என்ற தீவிரத் தன்மை அவர் எழுதிய கடிதத்திலிருந்து விளங்கியது. மோதிரம் உயர்ந்த ரகமாக வரும் போது இன்னும் சிறிது காலம் பொறுமையாக இருக்கலாமே என்று அவனுக்குத் தோன்றியது.

ஆறு மாதம் பொறுத்திருந்தான். இன்னுமா வைரமும் நீலமும் அகப்படவில்லை? ஒரு வேளை மாமனார் வைரத்தையும் நீலத்தையும் தேடிக் கொண்டு ஸயாம், சிலோன் எங்கேயாவது போய்விட்டாரா? ராஜுவால் பொறுமையோடு இருக்க முடியவில்லை. 'உடனே மோதிரத்தை அனுப்பவும்' என்று மாமனாருக்கு ஒரு கடிதம் எழுதினான். ஒரு வாரம் கழித்து அதற்குப் பதில் வந்தது. நீலக் கல்லையும் வைரத்தையும் தேடிக் கண்டு பிடித்து விட்டதாகவும் உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த நீலக் கல் ஒன்றும் இரண்டு வைரங்களும் அந்த ஊரிலுள்ள மாஜி ஜமீன்தார் ஒருவரிடம் இருப்பதாகவும் தற்சமயம் அவர் மிகுந்த கஷ்ட நிலையில் இருப்பதால் அவைகளைக் குறைந்த விலையில் விற்றுவிட முடிவு செய்திருப்பதாகவும், அவைகளை நூற்றைம்பது ரூபாய் கொடுத்தால் வாங்கிவிடலாமென்றும் உள்ளபடி அதன் மதிப்பு ஆயிரம் ரூபாய்க்கு மேல் போகுமென்றும், தற்சமயம் தன்னிடம் வசதி இல்லாததால் உடனே நூற்றைம்பது ரூபாய் அனுப்பி வைத்தால் உடனே அவைகளை வாங்கி மோதிரத்தைச் செய்து அனுப்புவதாக எழுதி இருந்தார். இது சமயம் தவறினால் மறுசமயம் வாய்ப்பது அரிது என்று எச்சரிக்கையும் செய்திருந்தார்.

மாப்பிள்ளையாண்டான் என்ன செய்வான்? மாமனாருக்குள்ள சிரமத்தை எல்லாம் உணர்ந்தான். தனக்காக அவர் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டதே அவனுக்குப் பெரிதாகப் பட்டது. ஆயிரம் ரூபாய்க்கு மேல் பெறக்கூடிய வைரக் கற்களை நூற்றைம்பது ரூபாய்க்கு வாங்கிக் கொடுப்பதென்பது சாதாரணக் காரியமா? எதையும் யோசிக்கவே அவன் மூளை இடங் கொடுக்கவில்லை. தன் கைவசமிருந்த ஆபீஸ் பணத்திலிருந்து நூற்றைம்பது ரூபாயை எடுத்துத் தந்தி மணியார்டர் செய்து வைத்தான் மாமனார் பெயருக்கு.

ஆயிரம் ரூபாய்க்கு மேல் பெறுமான முள்ள பொருள் நூற்றைம்பது ரூபாய்க்குக் கிடைக்கும்போது ஆபீஸ் பணத்தைக் கையாடுவது கூட அவனுக்குக் குற்றமாகப் படவில்லை.

இரண்டு நாளைக்கெல்லாம் மாமனாரிடமிருந்து ஒரு ரிஜிஸ்டர் பார்ஸல் அவனுக்கு வந்தது. அத்துடன் அவனுக்கு ஒரு கடிதமும் வந்தது. அவன் கடிதத்தைப் பிரித்துப் பார்ப்பதற்கு முன்னால் ஆவலோடும் ஆத்திரத்தோடும் பார்ஸலைப் பிரித்துப் பார்த்தான். ஒரு சிறிய கள்ளிப் பெட்டியில் வைக்கோல் கந்தல் கடிதாசுகளுக்கிடையே ஒரு சிறிய மோதிரம் இருந்தது. அதைக் கண்டதும் ராஜு திகைப்படைந்து நின்றுவிட்டான். ஏன் திகைப்படைய மாட்டான். அவன் எதிர் பார்த்ததற்கு நேர்மாறாகக் கல் வைக்கப் படாத சிறு மோதிரம் ஒன்று இருந்தால்...? சாதாரண மோதிரம் — அவன் முன்பு கொடுத்து விட்டு வந்த மோதிரத்தைப் போலவே அளவில் சிறிதாக இருந்தது. மாமனாரின் பேரில் அவனுக்கு எவ்வளவு கோபம் வரும்? எவ்வளவு ஆத்திரம் வரும்? அவசரம் அவசரமாக மாமனார் எழுதிய கடிதத்தைப் பிரித்து வாசிக்கலானான்.



"ஏனப்பா, அவளையே நினைத்து உருகுகிறாய்? அவள்தான் உன்னை மணந்து கொள்ள முடியாது என்று சொல்லி விட்டாளே! நீ அவளை மறந்து விடுவதுதான் நல்லது!"

"அதுதான் முடியாத காரியம். நான்தான் ஞாபக சக்தி மிகுந்தவன் என்று பரிசுகளெல்லாம் வாங்கியிருக்கிறேனே!"

சோணங்கிபூர்
25—11—50

சிரஞ்சீவி மாப்பிள்ளைக்கு,

அனேக ஆசீர்வாதம்: இவ்விடம் யாவரும் க்ஷேமம். இக்கடிதத்துடன் வரும் மோதிரப் பார்சல் தங்களுக்குக் கிடைத்திருக்கும். தாங்கள் தந்தி மணியார்டர் மூலம் அனுப்பிய நூற்றி ஐம்பது ரூபாயும் என்னிடமே பத்திரமாய் இருக்கிறது. தாங்கள் அனுப்பிய பணம் என் கைக்குக் கிடைக்கு முன்னால் நீலக் கல்லையும் வைரக் கல்லையும் வைத்திருந்த ஜமீன்தார் அவைகளை வேறு ஒருவருக்கு விற்று விட்டார். அதைப் போன்ற உயர்ந்த ரகக் கற்களை வாங்குவதற்கு இன்னும் கொஞ்ச நாள் சிரமப்பட வேண்டும். இங்கு இன்னும் ஒரு ஜமீன்தார் இருக்கிறார். அவரிடமும் உயர்ந்த நவரத்தினக் கற்கள் ஏராளமாய் இருக்கின்றன. ஆனால் இன்னும் அவர் அவைகளை விற்றுவிடக்கூடிய நிலைமைக்கு வரவில்லை. கூடிய சீக்கிரம் அவரும் அந்த நிலைமைக்கு வந்து விடுவார். அந்தச் சந்தர்ப்பத்தை நாம் பயன் படுத்திக் கொள்ளலாம். அது வரையில் நீங்கள் அனுப்பிய பணம் என்னிடமே இருக்கட்டும். எனக்கும் பணத்தட்டு ஏற்பட்ட போது உங்கள் பணத்தை எடுத்து உபயோகித்துக் கொண்டாலும் பின்னால் மோதிரம் செய்து கொடுக்கும் போது சரி செய்து விடுகிறேன். மோதிரம் உங்கள் கைக்கு நழுவுவதாய் முன்பு இருந்த மாடலிலேயே கொஞ்சம் சிறிதாகச் செய்து அனுப்பி யிருக்கிறேன். அதில் ஐந்து குந்துமணி எடைதான் குறையும். அவ்வளவு தான். அந்த ஐந்து குந்துமணி எடைப் பவுனையும் மோதிரத்தைச் சின்னதாக்கிக் கொடுத்ததற்காகப் பத்தரிடம் கூலிக்காக சரி செய்து விட்டேன். மற்றபடி வேறு விசேஷமில்லை. அவ்விடம் குஞ்சுக்குட்டி சௌக்யமாக இருக்கிறதா? தங்கள் பதில். வேணும் ஆசீர்வாதம்.

மாமனார், ஜலகண்டமய்யர்

ராஜு கடிதத்தைப் படித்ததும் அடித்து வைத்த களிமண் மாதிரி அசைவற்று உட்கார்ந்து விட்டான். என்ன செய்வான் பாவம்? மோதிரத்தை எடுத்துத் தன் கைவிரல்களில் ஏதாவது ஒன்றிற்குச் சரியாக இருக்கிறதா என்று பார்த்தான். ஒரு விரலுக்கும் சரியாய் இல்லை. இனி மேல் தனக்குப் பிறக்கப் போகும் குழந்தைக்கு அதை அணிவித்து அழகு பார்க்கலாம் என்ற சிறிதளவு ஆறுதலோடு திம்மதியடைந்தான்.

ராஜுவைப் போல் மகாசூர மாமனார்களை அடைந்தவர்கள் உலகத்தில் எவ்வளவோ பேர்கள் இருக்கலாம். ஆனால் இதற்கு நேர் மாறாக அப்பாவி மாமனார்களை அடைந்த பாக்யசாலிகளும் உலகத்தில் உண்டு. உலகத்திலேயே மிகவும் பச்சாத்தாபத்திற் குரிய ஜீவன்கள் இந்த அப்பாவி மாமனார்கள்தான். இவர்களுக்கு மாப்பிள்ளை என்றாலே சிம்ம சொப்பனம். இவர்களிடம் மாப்பிள்ளையிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது என்று விளையாட்டிற்குச் சொன்னால் கூடப்போதும் குடல் புரண்டு போகும். இல்லா விட்டால் சிறிது தலை கிறு கிறுப்பாவது ஏற்படும் இவருக்கு, பாவம்! பெண்ணைப் பெற்று ஒருவன் கையில் கொடுத்ததும் அல்லாமல் ஆயுள் உள்ளளவும் அவன் படுத்தி வைக்கிற பாட்டிற் கெல்லாம் உள்ளாக வேண்டிய ஜன்மம். இவருடைய மாப்பிள்ளை பத்துக் குழந்தைகளுக்குத் தகப்பனாராய் இருப்பார். இருந்தாலும் கல்யாணத்தன்று எவ்வளவு மாப்பிள்ளை முறுக்கோடு இருந்தாரோ அந்த முறுக்குத் தளராமலேயே இன்னும் மாமனாரைப் படுத்தி வைத்துக் கொண்டிருப்பார். ஐம்பது ரூபாய் அனுப்பவும், நூறு ரூபாய் அனுப்பவும் என்று அடிக்கடி தன்னுடைய பிதுரார்ஜித சொத்தை மாமனார் வைத்திருப்பது போல அதிகார தோரணையில் கடிதம் எழுதுவான் மாப்பிள்ளை. உடனே அலறிப் புடைத்

துக் கொண்டு பணம் அனுப்பியாக வேண்டும். இல்லாவிட்டால் மனைவியைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விடுவான் மாப்பிள்ளை. வருஷம் ஒரு குழந்தை. அந்தக் குழந்தைகள் வளரக்கூடிய இடம் மாமனார் வீடுதான் என்பது மாப்பிள்ளையின் சித்தாந்தம். ஏற்கனவே சம்சாரி என்று உலகத்தாரின் அனுதாபத்திற்கான மாமனாருக்குப் பேரன் பேத்தி சௌபாக்கியங்கள் வேறு. என்ன செய்வார் பாவம்! மாமனார் இவ்வளவு கஷ்டப் படுகிறாரே! நாம் ஒவ்வொரு குழந்தையாகப்பெற்று அனாதை ஆசிரமத்துக்கு அனுப்புவது போல் அவர் வீட்டிற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறோமே! மாதம் ஒரு ஐந்து ரூபாயாவது அனுப்பி வைப்போம் என்ற இரக்கம் ஏற்படுமா மாப்பிள்ளைக்கு? அதுதான் கிடையாது.

மாதம் இரண்டு மூன்று தடவை தன்னுடைய ஒன்பது குழந்தைகளின் சௌக்யத்தையும் பற்றி விசாரித்துக் கடிதம் எழுதுவார். வாரம் இரு முறை குழந்தைகளுக்குத் தவறாமல் எண்ணெய் தேய்க்கப் படுகிறதா? வேளா வேளையில் சாப்பாடு போடப் படுகிறதா? தினமும் சாப்பாட்டிற்கு நல்ல நெய்தானே உபயோகப் படுத்தப் படுகிறது? குழந்தைகளுக்கு இரவில் பசும்பால் கொடுக்கப்படுகிறதா? கடைசிக் குழந்தைக்குத் தவறாமல் கட்டி மருந்து வாங்கிக் கொடுக்கப்படுகிறதா? மூன்றாவது குழந்தைக்கு ஜலதோஷம் வராமல் பார்த்துக் கொள்ளப் படுகிறதா?' இப்படிப்பட்ட கேள்விகள்தான் மாப்பிள்ளையின் கடிதத்திலிருக்கும். இதற்கு மாமனார் காலா காலத்தில் பதிலளித்தாக வேண்டும். இல்லாவிட்டால் ருத்ர கோபம்தான்! எறும்பிலிருந்து எமன் வரையில் அந்தக் குழந்தைகளிடம் அண்டவிடாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு மாமனாருடையது. இது அவருடைய தலைச்சுமி. தெய்வாதீனமாக ஒரு குழந்தைக்கு அம்மை போட்டி விட்டால் போதும். எப்படிக் குழந்தைக்கு அம்மை வரும்? அது வராமல் பாதுகாக்கச் சக்தி இல்லையா? யோக்யதை இல்லையா? இப்படிச் சரமாரியாக மாப்பிள்ளையிடமிருந்து தாக்குதல்கள் வரும்.

இந்த அப்பாவி மாமனார்களைப் பற்றிப் பேசினால் நம்முடைய பச்சாத்தாபம் அசாத்யமாகிவிடு மாகையால் மூன்றாவது ரக மாமனாரைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். இவரைப் பிரசார மாமனார் என்று சொல்லுவதுதான் பொருந்தும். சதா தம்முடைய மாப்பிள்ளையைப்பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டு திரிவதுதான் இவருடைய வாழ்க்கை லட்சியம். வந்தவர் போனவரிடமெல்லாம் என் மாப்பிள்ளை இந்திரன் சந்திரன் என்று புகழ் பாடத் தவற மாட்டார். மாப்பிள்ளை அசட்டுத்தனமாகச் செய்யும் காரியங்கள் கூட அவன் மகா மேதா விலாசத்தோடு செய்த காரியமாக மாமனாருக்குப் படும். ஒரு பிரசார மாமனாரின் மாப்பிள்ளை சாதாரணப் பாடகனாய் இருப்பான். அவனுக்கு வருஷத்தில் ஒரு தடவை ரேடியோவில் பாட 'சான்ஸ்' இருக்கும். அவன் ரேடியோவில் பாடுவதற்கு ஆறு மாதத்துக்கு முன்பே ஊரில் மாமனாரின் பிரசாரம் ஆரம்பமாகி விடும். ஊரில் ஒரு வீடு பாக்கி விடாமல் தினமும் நுழைந்து 'என் மாப்பிள்ளை ரேடியோவில் பாடப்போகிறார் அவசியம் கேளுங்கள்' என்று எச்சரிக்கை செய்துகொண்டே இருப்பார்.

இன்னொரு பிரசார மாமனாரின் மாப்பிள்ளை ஏதோ ஒரு அக்ஞாதவாசப் பத்திரிகையில் தலையும் காலும் விளங்காமல் ஒரு கதை எழுதி இருப்பார். அவருடைய பிரசாரத்துக்கு இது போதுமானது. அந்தப் பத்திரிகையைத் தேடிப் பிடித்து அதில் பத்து காப்பிகளுக்குக் குறையாமல் வாங்கி ஒவ்வொரு வீட்டிலும் கொடுத்துப் படிக்கச் சொல்லுவார். அவர்கள் படிக்காவிட்டால் தாமே இருந்து அந்தக் கதையைப் படித்து அவர்களைச் சோதனை செய்வார். அவர் படித்துக் காட்டுவதோடு மட்டுமல்ல. அந்தக் கதையிலிருந்து விளங்காத பொருள்களை யெல்லாம் விளங்க வைத்து, இல்லாத அர்த்தங்களை யெல்லாம் விரிவுரையோடும் வியாக்யான பூர்வமாகவும் சொல்லித் தம் மாப்பிள்ளையின் அதி சூர சாகஸங்களையும் அனாயாசமான சூரத்தனத்தையும் ஆயாசப்படாமல் எடுத்துச் சொல்லுவார்.

இப்படிப்பட்ட மாமனாரைப் படைத்த மாப்பிள்ளைக ளெல்லாம் பாக்யசாலிகள் தான். ஆனால் இதற்கு நேர்மாறான துரதிருஷ்டசாலிகளான மாப்பிள்ளைகளும் உண்டு. சில மாமனார்களுக்குச் சதா தங்கள் மாப்பிள்ளையைப்பற்றித் திட்டிக் கொட்டுவதே லட்சியம். இவர்களுக்கு மனக் குறை மாமனார்கள் என்று பெயர். "இதைக் கேளும் ஸ்வாமி! மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானைத் தலை கிராப்பை எடுத்துடு, எடுத்துடுன்னு கதறிக் கதறிச் சொல்கிறேன். கேட்டால் தானே? அசத்து; அது போகட்டும். நெற்றியில் பளிச்சினு திருமண்ணாவது இட்டுக் கொள் என்கிறேன். கேட்டால்தானே? அசடு சுவாமி. சுத்த அசடு. தினம் ஆபீஸுக்குப் போகிறவன் பாங்காய்ப் பஞ்ச கச்சம் வைத்துக் கட்டிக் கொண்டு போகக் கூடாதோ? மகா மூடம் போங்கோ! தெரியாத்தனமா இப்படிப்பட்ட அநாசாரத்துக்குக் கொண்டு போய்ப் பெண்ணைக் கொடுத்துட்டுத் தவிக்கிறேன்..." என்று ஒவ்வொருவரிடமும் தயங்காமல் மாப்பிள்ளையைப் பற்றி அகராதிக்குள் அகப்படாத வார்த்தைகளை யெல்லாம் பிரயோகித்துத் திட்டிக் கொட்டுவார்.

இவ்வளவுக்கும் பிறகு என் மாமனாரைப் பற்றி நான் ஏதாவது சொல்லுவே னென்று யாராவது எதிர்பார்க்கலாம். ஆனால் அது முடியாது. ஏனென்றால் என் மாமனார் மேலே சொன்ன ரகங்களில் எந்த ரகத்தைச் சேர்ந்தவரென்று சொல்லுவது கடினம். இதுவரையில் அவரை நான் புரிந்து கொள்ளவில்லை. என்னையும் அவர் புரிந்துகொள்ள வில்லை.

# புதிய ரிக்கார்டுகள்!

## ஜுபிடரின் "ராணி" பாட்டுகள்



N. 65057
பி. ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி) & பார்டி
நாளோ நாளோ
இன்பம் நான்

N. 65058
பி. பானுமதி
சின் டின் டா
உண்மையில்லாத உலகிலே

## ஆர். பத்மனாபன் ப்ரொடக்ஷன்ஸ் "குமாரி" பாட்டுகள்



N. 65045
ஏ. எம். ராஜா
அறியாத காதல்
ஏ. பி. கோமளா
சொல்ல சொல்ல

N. 65046
பி. ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி) & ஏ. எம். ராஜா
இருளிலே
ஏ. பி. கோமளா & பார்டி
ஆயோ ஷிகி மாயோ

N. 65047
கே. வி. மகாதேவன்
ஆணுக்கொரு பெண் வேணுமே
பி. ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி)
லைலீ லைலீ

## ராதாகிருஷ்ணா பிலிம்ஸ் தயாரித்த "அந்தமான் கைதி" பாட்டுகள்

N. 65054
சிதம்பரம் ஜெயராம் & எம். எல். வசந்தகுமாரி
காணி நிலம் வேண்டும்
2 பாகங்கள் (ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி)



## பரணியின் "காதல்" பாட்டுகள்

N. 65048
பி. பானுமதி & கோரஸ்
மாய வாழ்விலே
பி. பானுமதி, கே. சிவராம் & கோஷ்டி
மங்கையர்கள் ராஜ்யமே

N. 65049
ஏ. பி. கோமளா
ஆஹா ஆனந்தமே
பி. பானுமதி
இன்பமே

N. 65050
பி. நாகேஸ்வர ராவ்
ப்ரபஞ்சமெல்லாம்
ஆர். பாலசரஸ்வதி தேவி, கே. சிவராம் & கோஷ்டி
மதிசயத்திலே குடியிருக்கிறது

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட், கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி




# சமர்த்துக் கிளி

விஜயம்

**பா**லுவுக்கு அன்று ஒரே கொண்டாட்டம். காரணம் அவன் மாமா அன்று ஊரிலிருந்து வந்திருந்ததுதான்.

பாலுவினிடம் மாமாவுக்கு அலாதிப் பிரியம். அவன் ரொம்பப் புத்திசாலி. ஒழுங்காகப் பள்ளிக்கூடத்துக்குப் போவான். பள்ளிக்கூடத்தில் அவன் வகுப்பில் அவன்தான் முதல்; விளையாட்டில் அவன்தான் முதல்; பள்ளிக்கூடம் விட்டதும் வீட்டுக்கு ஓடி வருவதிலும் அவன்தான் முதல்.

மாமா எப்பொழுது ஊரிலிருந்து வந்தாலும் பாலுவுக்குத் தின்பண்டங்களும் விளையாட்டுச் சாமான்களும் கதைப் புஸ்தகங்களும் நிறைய வாங்கி வருவார். ஆகவே அந்த மாமாவினிடம் பாலு மிகவும் பிரியமாயிருந்ததில் அதிசயம் இல்லையல்லவா?

பாலுவின் மாமா நல்ல உத்தியோகத்திலிருந்தார். அவருக்குக் குழந்தைகளிடம் மிகவும் பிரியம். அவர் பெங்களூரில் இருந்தார். ஒவ்வொரு கோடை லீவுக்கும் அவர் பாலுவையும் அவன் தம்பி கோபுவையும் தங்கை கமலாவையும் பெங்களூருக்கு அனுப்பச் சொல்லிக் கடிதம் எழுதி விடுவார்.

பெங்களூரில் மாமாவின் பங்களா ரொம்ப அழகாயிருந்தது. பங்களாவைச் சுற்றிப் பெரிய தோட்டம் இருந்தது. அந்தத் தோட்டத்தில் மாமரம், கொய்யாமரம், பலாமரம் முதலிய மரங்கள் நிறைந்து ரொம்ப அழகாயிருக்கும். கோடை லீவுக்கு அங்கே போனால் பாலுவுக்கு ரொம்பப் பிரியமான மாம்பழம் வேண்டிய அளவு கிடைக்கும். மாமா தம்முடைய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் கூடை கூடையாக மாம்பழங்களை அனுப்புவார்.

பெங்களூருக்குப் போய் விட்டால் பாலுவுக்குத் திரும்பி ஊருக்கு வருவதற்கே மனம் வராது. பள்ளிக்கூடம் திறந்ததும் ஊருக்குப் போக வேண்டுமே என்று பாலுவுக்குத் துக்கம் துக்கமாக வரும்.

இந்த வருஷம் மாமா, மாமி, குழந்தை பட்டு எல்லாரையும் சென்னைக்கு வரும்படி பாலுவின் அப்பா எழுதி விட்டார். ஆகையினால் பாலு இந்த வருஷம் பெங்களூருக்குப் போக முடியவில்லை. பெங்களூருக்குப் போக முடியவில்லையே என்று பாலுவுக்குக் கொஞ்சம் வருத்தமாயிருந்தாலும் மாமா, மாமி, பட்டு எல்லோரும் இங்கே வருகிறார்கள் என்பதை நினைத்து அவன் மிகவும் சந்தோஷமாயிருந்தான்.

**மா**மா எப்போதும் போல் மாம்பழம், மிட்டாய், கதைப் புஸ்தகங்கள் எல்லாம் வாங்கி வந்திருந்தார். எல்லாம் வாங்கி வந்திருந்தும் பாலுவின் மனசுக்கு மிகவும் குறையாகவே இருந்தது.

"பாலு, இந்தத் தடவை நீ ரொம்ப நாளாகக் கேட்டுக் கொண்டிருந்த பிளானல் சட்டை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன், பார்த்தாயா? பரீக்ஷையில் முதலாவதாகத் தேறியிருக்கிறாய் அல்லவா? அதற்காகத்தான் அதை வாங்கி வந்தேன்!'' என்று மாமா சந்தோஷத்தோடு சொன்னார்.

"சரிதான், மாமா! சட்டை ரொம்ப நன்றாயிருக்கிறது ஆனால் நான் ரொம்ப நாளாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன், இன்னொன்று...அதை வாங்கிக் கொண்டு வரவில்லையே, மாமா!'' என்று பாலு ரொம்ப ஏக்கத்தோடு சொன்னான்.

"அது என்ன பாலு? சொல்லு. இந்த ஊரிலேயே வாங்கித் தந்து விடுகிறேன்!'' என்றார் மாமா.

"பெங்களூரில் நம்ம பங்களா தோட்டத்தில் நிறையக் கிளி வருமே! நீ எனக்கு விளையாட ஒரு கிளி தருகிறேன் என்று முன்பு ஒரு தடவை சொன்னாய். அதைத்தான் கேட்டேன்!'' என்றான் பாலு.

"அட போக்கிரி, அதை இன்னும் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயா? சரி, நான் ஊருக்குப் போவதற்குள் உனக்கு ஒரு கிளி வாங்கிக் கொடுத்து விட்டுப் போகிறேன்!'' என்று மாமா சொன்னதும் பாலுவுக்குத் திருப்தியாய்ப் போய் விட்டது.

மறுநாள் பொழுது விடிந்ததிலிருந்து பாலு வுக்குக் கிளி ஞாபகமாகவே இருந்தது. தினம் மாமாவோடு வெளியே போகும்போதெல் லாம் கடைத் தெருப் பக்கங்களில் கவனித் துக் கொண்டே போனான்.

கிளியைத் தவிரக் கடைத் தெருவில் எல்லாம் வந்தது. பாலுவுக்கு ரொம்ப வருத்தமாயிருந்தது.

அன்று கடைத் தெருப் பிள்ளையார் கோயி லில் உற்சவம். புதிதாகக் கடைகள் நிறைய வந்திருந்தன. வழக்கம் போல் பாலுவும் அவன் மாமாவும் கடைத் தெருவுக்குப் போனார்கள். பாலு மிகவும் மனக் குறை யோடுதான் போனான்.

கடைத்தெருவில் ஏராளமாகப் புதுக் கடைகள் வந்திருந்ததைப் பார்க்க பாலுவுக் குக் கொஞ்சம் உற்சாகமாயிருந்தது. புதிதா கப் போடப்பட்டிருந்த கீற்றுக் கொட்டகைக் கடைகள் பக்கமாக மாமாவும் பாலுவும் போனார்கள். அப்பொழுது பாலு, "மாமா, மாமா!" என்று பலமாகக் கத்திக்கொண்டே ஒரு கடை வாசலில் நின்று விட்டான்.

மாமா திகைத்துப் போய் ஒன்றும் புரியா மல், "என்னடா பாலு, என்ன?" என்று கேட்டுக் கொண்டே அவனிடம் சென்றார்.

"மாமா, அதோ பாருங்கள், மாமா! அந் தக் கடையில் கிளி விற்கிறான்!" என்று பாலு ஆச்சரியத்துடன் கத்தினான்.

அந்தச் சமயம் பார்த்து மாமாவின் பழைய சினேகிதர் வந்து சேர்ந்தார். உடனே மாமா, "பாலு, இந்தா பணம்! நீயே பார்த்து வாங்கிக் கொள். நான் இந்த மாமாவோடு பேசிக் கொண்டிருக் கிறேன்!" என்றார். பாலு மாமாவினிட மிருந்து மணிபர்ஸை வாங்கிக் கொண்டு, கிளி விற்கும் கடைக் குப் போனான், அங்கே கொஞ்சம் கூட்டமா யிருந்தது.

"பச்சைக் கிளி, ஒரு ரூபாய்! பச்சைக் கிளி ஒரு ரூபாய்!" என்று கடைக்காரன் கத்தி னான். அவன் கிளியை ஏலம் போடுகிறான் என்று பாலுவுக்குத் தெரிந்து விட்டது. உடனே பாலு, "இரண்டு ரூபாய்!" என்று ஏலம் கேட்க ஆரம்பித்தான். அப் பொழுது அடுத்த நிமி ஷம் "மூன்று ரூபாய்!" என்று ஒரு சிறு பைய னின் குரல் கேட்டது.



கடைக்காரன் 'மூன்று ரூபாய்!' 'மூன்று ரூபாய்!' என்று கத்த ஆரம்பித்தான்.

பாலு இன்னொரு பையன் அந்தக் கிளி யைத் தட்டிக்கொண்டு போவதைப் பார்த் துக்கொண்டு சும்மா இருப்பானா? "நாலு ரூபாய்!" என்றான். உடனே அந்தச் சிறு வன் "ஐந்து ரூபாய்!" என்று கேட்டான். பாலு, "ஆறு ரூபாய்!" என்றான். அந்தப் பையன், "ஏழு ரூபாய்!" என்றான். பாலு "எட்டு ரூபாய்!" என்றான். அவன், "ஒன் பது ரூபாய்!" என்றான். பாலு, கோபத் துடன் "பத்து ரூபாய்!" என்றான். நல்ல வேளையாக அந்தப் பையன் அதற்கு மேல் கேட்கவில்லை.

பாலு மணிபர்ஸைத் திறந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து விட்டு, கூண்டோடு கிளியை வாங்கிக் கொண்டு மாமாவினிடம் வந்து சேர்ந்தான். மாமா அவனை வீட்டுக்கு அழைத்து வந்தார்.

பாலு கிளி வாங்கிக்கொண்டு வந்திருப்ப தைப் பார்த்ததும் அவனுடைய நண்பர்க ளெல்லாம் கிளியைப் பார்க்கச் சூழ்ந்து கொண்டனர்.

"ஏண்டா பாலு, இந்தக் கிளிக்குப் பேசத் தெரியுமாடா?" என்று கேட்டுக்கொண்டே அவன் நண்பன் கிட்டு கிளியின் அருகே சென்று பார்த்தான்.

அதற்குள் பாலு, "இப்பொழுதுதானே டா வாங்கி யிருக்கிறேன்? இனிமேல்தான் அந்தக் கிளிக்குப் பேச்செல்லாம் சொல்லித் தர வேண்டும்!" என்றான்.

அப்பொழுது திடீரென்று கூண்டிலிருந்த கிளி, "எனக்குப் பேசத் தெரியாது என்று உனக்கு யார் சொன்னது? உனக்கு எதிராகக் கடைக் காரனிடம் கிளியின் விலையை உயர்த்திக் கொண்டே போனது யாரென்று நினைத் தாய் நானேதான்! மனி தக் குரல் போல் பேசி னேன்!" என்றது.

பாலுவுக்கு ஆச்சரி யம் தாங்கவில்லை. கடையில் கேட்ட குரல் மாதிரியே கிளி பேசவே பாலுவுக்கு இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. கிளி யினிடம் அவனுக்குக் கோபம் வந்தாலும் அந்தச் சமர்த்துக் கிளியை ஒன்றும் செய்ய அவனுக்கு மனம் வரவில்லை.

# சரோஜாவின் அதிர்ஷ்டம்

~ டி.வி. சீனு ~

"விசாலம்! விசாலம்!"

"........................"

"ஏன் பேசமாட்டேன் என்கிறாய்! என்மேல் கோபமா!"

விசாலம் தலையை மேஜைமீது கவிழ்த்துகொண்டிருந்தாள். அவள் அழுது கொண்டிருந்தாள் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

"விசாலம்! ஏன் அழுகிறாய்! என்ன நடந்தது! சொல்லமாட்டாயா!"

விசாலம் ஒன்றும் பதில் பேசாமல் எழுந்து அடுக்களைக்குச் சென்றாள். ஐந்து நிமிஷத்திற்குள் டிபன் தட்டுடனும் கையில் காப்பியுடனும் அவன் முன் ஆஜரானாள். அவள் அழுததால் அவளுடைய கண்கள் கலங்கியிருந்தன.

டிபன் தட்டை வாங்கி மேஜைமீது வைத்து விட்டு, "எதற்காக அழுதாய் என்று சொல்லமாட்டாயா! சரோஜா ஏதாவது சொன்னாளா!" என்று கூறியவாறு அவளது தாடையை நிமிர்த்தினான் ராகவன்.

"என் தம்பி போக்கிரியாம். ஒழுக்கம் இல்லாதவனும்! அவனை உங்கள் தங்கை கல்யாணம் செய்து கொள்ள மாட்டாளாம். என் தம்பியைப் பற்றிச் சொல்வதற்கு இன்னும் ஒன்றும் பாக்கியில்லை. அவ்வளவும் சொல்லித் தீர்த்துவிட்டாள்!" என்றாள் விசாலம். மீண்டும் அவள் கண்களில் கண்ணீர் வழிந்தோடியது.

"அடடா! இதற்கா அழுகிறாய்! அவள் உனக்குச் சின்னவள்தானே! என்ன வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டுமே! நீதான் பொறுத்துக் கொள்ளேன்" என்றான் ராகவன்.

"நீங்கள் இவ்வளவு தூரம் செல்லம் கொடுத்துத்தான் அவள் தலைக்கு மேல் ஏறுகிறாள்" என்றாள் கடுகடுத்த குரலில் விசாலம்.

"என் தங்கையைப் பற்றி நீ அனாவசியமாக ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. இஷ்டமிருந்தால் இங்கு அவளுடன் சண்டை சச்சரவு இல்லாமல் இரு. இல்லை என்றால் இன்றிரவு உன் பிறந்தகத்திற்கு ரயிலேற்றி விடுகிறேன். இரண்டில் ஒன்று முடிவு செய்" என்று கூறிவிட்டு ராகவன் வெளியே சென்று விட்டான்.

பக்கத்து அறையில் இவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சரோஜாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. 'ஈசுவரா! என்னைப் பூமிக்கு பாரமாக ஏன் படைத்தாய்! நான் மன்னியிடம் சண்டைக்கு ஒன்றும் போகாமல் இருக்கும்போதே இப்படி யிருக்கிறதே! அவளாக ஏதாவது கற்பனை செய்து கொண்டு அண்ணாவிடம் அஞ்சாமல் பொய் சொல்லி விடுகிறாள். இவள் தம்பியை எனக்குப் பிடிக்கவில்லை யென்பது என்னவோ உண்மைதான். அதற்காக நான் அவனை என்னவெல்லாமோ ஏசினேன் என்று கூறி விட்டாளே!' என்று எண்ணி வருந்தினாள்.

வீட்டை விட்டு வெளியேறிய ராகவனின் கால்கள் தாமாகக் கடற்கரையை நோக்கிச் சென்றன. கடற்கரையை அடைந்ததும் துண்டை மணற் பரப்பில் விரித்து அதில் அமர்ந்தான். அவன் மனமோ குமுறிக் கொண்டிருந்தது. ஆனால் பொங்கி யெழும் கடல் அலைகள் அவன் மனதுக்குச் சற்று நிம்மதியை அளித்தன.

அவன் அருகில் இருந்த சிறுவர்கள் மணலால் வீடு கட்டுவதும் பின் அதைக் கலைப்பதுமாக விளையாட்டில் ஈடுபட்டிருந்தனர். அதைப் பார்த்துக் கொண்டிருந்த ராகவனுக்குத் தானும் சிறுவயதில் இதே போல் இதே கடற்கரையில் விளையாடியது எல்லாம் அவன் ஞாபகத்திற்கு வந்தன.

ராகவனின் தந்தை சிறு வயதிலேயே காலமாகி விட்டார். ராகவனின் தாய் ராகவனையும் குழந்தையாய் இருந்த சரோஜாவையும் அழைத்துக் கொண்டு தன் தமையனிடம் அடைக்கலம் புகுந்தாள். ராகவனின் மாமாவாகிய விசுவநாதய்யரும் அவர்களுக்கு அடைக்கலம் கொடுத்து ஆதரித்தார். ராகவனை பி. ஏ. வரையில் படிக்க வைத்தார்.

இதற்கிடையில் ராகவனின் தாய் காலமானாள். கடைசியாக அவள் பிராணனை விடும் சிறிது நேரத்திற்கு முன் ராகவனை அழைத்து அவனிடம் கூறிய வார்த்தைகள் இன்றும் அவன் மனசில் அழியா ஆணிவேர் போல் பதிந்திருந்தன.

"ராகவா! நான் இனிமேல் பிழைப்பேன் என்று எண்ண வேண்டாம். உன்னிடம் நான் இப்போது சொல்லப் போவது மிக முக்கியமான விஷயம். எக்காரணம் கொண்டும் நீ சரோஜாவை மனம் நோகும்படியாக ஒன்றும் சொல்லப்படாது. இனி அவளுக்குத் தாயும் தந்தையும் நீதான். அவளுக்கு ஒரு நல்லவரனைத் தேடி மணம் முடித்து வைப்பதும் உன் பொறுப்பு!" என்று கூறிக் கண்ணை மூடி விட்டாள்.

ஜில்லென்று குளிர் காற்று ராகவன் மீது படவே அவனது



சிந்தனை கலைந்தது. மண் வீடு கட்டிக் களித்துக் கொண்டிருந்த சிறுவர்கள்கூட இருட்டி விட்டதினால் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். ராகவனும் மேல் உள்ள மணலைத் தட்டிச் சரிப்படுத்திக் கொண்டு வீட்டை நோக்கிநடக்க ஆரம்பித்தான்.

வீட்டை நெருங்கியதும் அவனது கண்கள் வீட்டு வாசலில் ஒரு ஜட்கா நிற்பதைக் காணத் தவறவில்லை. 'ஓகோ! பிறந்தகத்திற்குப் புறப்பட்டு விட்டாளோ! நான் கோபத்தில் சொன்னால் அதற்கு ஆத்திரப்பட்டுக் கொண்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டாளே!' என்று ஆத்திரத்தால் பல்லைக் கடித்தவாறு உள்ளே நுழைந்தான். தாழ்வாரத்தில் விசாலமும் சரோஜாவும் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தன. மெல்ல அங்கிருந்தவாறே கவனமாய்க் கேட்கலானான்.

"மன்னி! இன்று நான் உங்களை ஏதாவது சொன்னேனா! ஒன்றும் சொல்லாமல் இருக்கும் போதே அண்ணாவிடம் குறை கூறுகிறீர்களே! இது உங்களுக்கு நியாயமாகப்படுகிறதா! வீணாக வம்பை விலைக்கு வாங்கிக் கொண்டு பிறந்தகம் செல்லுகிறீர்களே! அண்ணா போகச் சொன்னாலும் உங்களுக்கு இங்கிருக்க உரிமையில்லாமலா போய் விடும்! அப்படி நான்தான் ஏதாவது தவறாகச் சொல்லிவிட்டேன் என்று தோன்றினாலும் என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் ஊருக்குப் போகாதீர்கள்!" என்று விசாலத்தைத் தடுத்தாள் சரோஜா. விசாலம் பதில் பேசாமல் விர்ரென்று வண்டியை நோக்கி நடந்தாள்.

இதைக் கேட்ட ராகவனின் ஆத்திரம் அதிகரித்தது. மட மடவென்று உள்ளே நுழைந்தான்.

"விசாலம்! உம். சீக்கிரம் புறப்படு. இனி நீ இந்த வீட்டில் அரை நிமிஷம்கூடத் தங்கக் கூடாது!" என்றான் ராகவன்.

விசாலம் அவனை முறைக்கப் பார்த்து விட்டுத் தன் பெட்டியுடன் ஜட்காவில் போய் ஏறிக் கொண்டாள். ஜட்கா ஸ்டேஷனை நோக்கிப் பறந்தது. அவளை அனுப்பக்கூட ராகவன் ஸ்டேஷனுக்குப் போகவில்லை.



விசாலம் பிறந்தகம் சென்று விளையாட்டுப் போல் இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. ராகவன் விசாலத்தைப் பற்றி எண்ணுவதையே நாளடைவில் விட்டு விட்டான். ஆனால் சரோஜாவால் அப்படி யிருக்க முடியவில்லை. தினமும் அவள் விசாலத்தை நினைந்து உருகினாள்.

இதற்கிடையில் சரோஜாவுக்குக் கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதில் முனைந்தான் ராகவன். பம்பாயில் இருக்கும் ராகவனின் நண்பன் ஒருவன் ராகவன் கேட்டுக் கொண்டபடி தன் மைத்துனன் ஜாதகத்தை அனுப்பியிருந்தான். பையனின் ஜாதகம் சரோஜாவின் ஜாதகத்துடன் சரியாகப் பொருந்தி யிருந்தது.

வெங்கடேசன் — அதுதான் சரோஜாவுக்குப் பார்த்திருக்கும் பையன், பம்பாயில் ஒரு பிரபல இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் மானேஜராக இருந்தான். பையனின் தகப்பனார் ராமமூர்த்தி சென்னையில் ஒரு பிரபல டாக்டராக இருந்தார். தவிர நிலமும் சொத்தும் நிறைய இருந்தன.

ராகவனுக்கு இந்த இடம் மிகவும் பிடித்திருந்தது. சரோஜாவை இந்த இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டால் அவளைப் போன்ற அதிர்ஷ்ட சாலிகள் வேறு எவரும் இருக்க மாட்டார்கள் என்று எண்ணினான்.

சரோஜாவின் மனம் ஒரு நிலையில் இல்லை. அடுத்த வாரம் பையன் பெண்ணைப் பார்க்க வருவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வெகு நேரமாக யோசித்த பின் கடைசியாக அவள் ஒரு முடிவுக்கு வந்தாள்.

உடனே தன் மன்னி விசாலத்துக்குக் கடிதம் எழுத ஆரம்பித்தாள். அதில் தன்னைப் பையன் பார்க்க வருவதைப் பற்றி விவரமாக எழுதி அவர்கள் வரும் சமயத்தில் வீட்டில் விசாலம் இல்லாமல் இருந்தால் நன்றாயிருக்காது என்றும் ஆகவே இந்தக் கடிதத்தைக் கண்டதும் உடன் புறப்பட்டு வரும்படியாகவும் எழுதி அன்றையத் தபாலில் சேர்த்து விட்டாள்.

பிறந்தகம் சென்ற விசாலத்திற்கு அப்போது தான் தன் தம்பியின் கெட்ட நடத்தையைப் பற்றித் தெரியவந்தது. அவன் வீட்டை விட்டுப் போய் மூன்று மாதங்கள் கழிந்துவிட்டன. விசாலத்திற்கு அப்போதுதான் ஊரார் சொல்வதும் உண்மையென்று தெரியவந்தது.

அன்றிரவு விசாலத்திற்குச் சரியாக உறக்கம் பிடிக்கவில்லை. 'ஐயோ! சரோஜாவை வீணாகத் துன்புறுத்தி விட்டேனே! நல்ல வேளையாக அவளை என் தம்பிக்கு மணம் செய்து கொடுக்காமல் தப்பினேனே! அந்த மட்டும் சரோஜா அதிர்ஷ்டசாலிதான். நாளைக் காலை நான் செய்ததெல்லாம் தவறு என்று விரிவாக சரோஜாவுக்குக் கடிதம் எழுத வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டு அவள் தூங்க ஆரம்பித்தாள்.

ஆனால் மறுநாள் அவள் அப்படிக் கடிதம் எழுதுவதற்குக் கூட நேரமில்லை. அன்று காலை பத்து மணிக்குத் தபால்காரன் அவள் பேருக்கு வந்த கவரைக் கொடுத்து விட்டுச் சென்றான். முதலில் கடிதம் சரோஜாவிடமிருந்து தான் வந்திருக்கிறது என்பதை அவளால் நம்ப முடியவில்லை. அவளது கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன.

அன்றுதான் சரோஜாவைப் பார்க்க அவர்கள் வரப்போவதாக இருந்தது. அதுவும் அவர்கள்

மாலை ரயிலில் வரப்போவதாகக் குறிப்பிட்டிருந்தார்கள். ராகவன் சரோஜாவிடம் வீட்டுக் காரியங்களைக் கூடமாடக் கவனித்து கொள்ள அடுத்த வீட்டு ஸ்திரீயை அழைத்துக் கொள்ளும்படியும் மாலை அவர்கள் வருவதற்குள் தயாராக இருக்கும்படியும் கூறிவிட்டுச் சென்றான்.

அன்று காலை மணி பத்திருக்கும். சரோஜாவின் வீட்டு வாசலில் ஒரு ஜட்கா வந்து நின்றது. ஜட்காவில் இருந்து இறங்கிய மன்னி விசாலத்தைச் சரோஜா உள்ளே அழைத்துச் சென்றாள்.

உள்ளே சென்ற விசாலம் சரோஜாவை அன்புடன் தழுவிக் கொண்டாள். "சரோ! உனக்கு இருக்கும் புத்தி எனக்கில்லை. என் தம்பி ஒழுக்கம் கெட்டவன் என்று இப்போதுதான் அறிந்தேன். உன்னை அவனுக்கு விவாகம் செய்து வைக்காமல் தப்பிவிட்டேன். எல்லாம் உன் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். இது விஷயமாக நான் கடுமையாகப் பேசினதையெல்லாம் மறந்து, என்னை மன்னித்து விடு" என்றாள் விசாலம்.

"மன்னி! இதென்ன வார்த்தை! பெரியவளாகிய உங்களை நான் மன்னிப்பதா!" என்று அன்புடன் கடிந்து கொண்டாள் சரோஜா.

அன்று மாலை ராகவன் ஸ்டேஷனுக்குச் சென்று சம்பந்தி வீட்டுக்காரர்களை அழைத்து வந்தான். வீட்டில் விசாலத்தைக் கண்டதும் அவனுக்குக் கோபம் பொங்கியது. ஆனால் வந்தவர்கள் முன்னிலையில் அதைக் காட்ட வேண்டாமென்று சும்மா இருந்து விட்டான்.

பெண் பார்க்கும் படலம் நடந்தது. பையனுக்கும் பெண்ணைப் பிடித்து விட்டது. அவர்கள் விவாகத்திற்குத் தேதி வைக்கும்படி கூறி விட்டு அன்றிரவு ரயிலிலேயே தங்கள் ஊருக்குத் திரும்பிப் போய் விட்டார்கள்.

அன்றிரவு படுக்கச் சென்ற ராகவன் விசாலத்தினிடம் ஒன்றும் பேசவில்லை. அதை அறிந்து கொண்ட விசாலம் சட்டென்று அவன் காலில் விழுந்து காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

"என்னை மன்னித்து விடுங்கள். என் தம்பியைப் பற்றி இப்போதுதான் அறிந்து கொண்டேன். இந்த மட்டும் சரோஜாவை அவனுக்குப் பலவந்தமாக விவாகம் செய்து வைக்காமல் தப்பினேன். சரோஜா அதிர்ஷ்டசாலிதான். தவிர இப்போது கிடைத்திருக்கும் வரனைப் போல் சரோஜாவுக்கு வேறு வரன் கிடைப்பது அரிது! நல்ல வேளையாகப் பையனும் சம்மதித்து விட்டான்! எல்லாம் சரோஜாவின் அதிர்ஷ்டம்தான்!" என்றாள் விசாலம். அவளது ஆனந்தக் கண்ணீர் அவனது பாதத்தைக் கழுவின.

"விசாலம், அழாதே! எழுந்திரு! அவளது அதிர்ஷ்டத்தினால்தான் உன் புத்திகூடத் திருந்தியது! இருக்கட்டும். நல்ல வேளையாக நீ வந்து சேர்ந்தாய். கல்யாண காரியத்தைக் கவனிக்க வேண்டும்!" என்றான் ராகவன். அப்போது விசாலத்தின் முகத்தில் பொங்கிய ஆனந்தத்தை யாரால் அளவிட முடியும்!

# படித்துப் பாருங்கள்!

## தர்ம சக்கரம்

ராமகிருஷ்ண பரமஹம்ஸரைக் குருநாதராகக் கொண்டு, அவருடைய உபதேசங்களையும் அறவுரைகளையும் நீண்ட காட்களாகத் தமிழர்களுக்குப் போதித்து வருபவர் ஸ்வாமி சித்பவானந்த அடிகள். அன்னாரை ஆசிரியராகக் கொண்ட தர்ம சக்கரம் பாரமார்த்திகத் துறையில் விஷயம் செறிந்த பல கட்டுரைகளைத் தாங்கி வெளியாகி வருகின்றது. சித்திரை மாத இதழில் ஆசிரியர் எழுதியுள்ள 'பரமஹம்ஸரும் - சாஸ்திரப் பிரமாணமும்' என்ற கட்டுரையும் 'அனுஷ்டான வேதாந்தம்' என்ற பிறிதோர் கட்டுரையும் பெரிதும் பயன்படக்கூடிய கட்டுரைகளாகும். இவை தவிர, பாரமார்த்திகத் துறையில் எழக்கூடிய சந்தேகங்களுக்கு, 'சந்தேகத் தெளிதல்' என்ற பகுதியில் விளக்கம் அளிக்கப்படுகின்றன. இம் மாத சஞ்சிகை ஆஸ்திகர்களுக்கும் ஊறிய தர்மத்தில் சந்தேகமும் குழப்பமும் உள்ளவர்களுக்கும் பெரிதும் பயன்படும்.

பிரசுரம்: ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, திருச்சிராப்பள்ளி, வருட சந்தா: ரூ. 5; தனிப் பிரதி: அணா 8.

## வாழ்க்கைப் புயல்

சந்தனக்கோனாரின் கரம் பிடித்தவள் கண்ணம்மாள். ஒழுங்காக நடந்துவந்த அவர்களது வாழ்க்கையில் திடீரெனப் புயல் வீச ஆரம்பித்தது. அந்தப் புயலுக்குக் காரணம் தெரிந்து கொள்ள வேண்டுமானால், சந்தனக் கோனாரின் நண்பன் கிருஷ்ணனைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். அவனைப் பற்றித் தெரிந்து கொண்டால், கண்ணம்மாள் தொட்டுத் தாலி கட்டிய கணவனைப் பிரிய நேர்ந்த காரணம் தானாகத் தெரிந்துவிடும். இவை இரண்டும் தெரிந்து விட்டால், கதை முழுவதும் தெரிந்து அந்தக் கதைக்குள் பொதிந்து கிடக்கும் பெண்மையின் சக்தியும் தெரிந்துவிடும். எழுதியவர்: கவி; பிரசுரம்: புதுமைப் பிரசுரம், பெண்ணாடம், தென்னாற்காடு ஜில்லா; விலை: ரூ. 1.

## கடிதம் எழுதுவது எப்படி?

சூரியனைக் கண்டதும் தாமரை மலர்வது போல் ஸ்ரீமான் தபால்காரரைக் கண்டதும் மக்கள் மனம் மலர்கிறது. அவர் எங்கிருந்தாவது ஒரு நல்ல செய்தி கொண்டு வருவார் என்று எதிர்பார்க்கிறோம். அப்படி அவர் வந்து ஒரு கார்டோ, கவரோ கொடுக்காமல் போய் விட்டால் பெருத்த ஏமாற்றமடைகிறோம். இதே மாதிரி உணர்ச்சிதானே நம் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் ஏற்படும் என்று நாம் நினைப்பதில்லை. அப்படி நினைத்தாலும் எப்படி எழுதுவது என்று தெரியாமல் தவித்துப் போகிறோம். நம் நண்பருக்குக் கல்யாணம் என்றால் நம் மகிழ்ச்சியை எப்படித் தெரிவிப்பது என்று தெரியாமல் நம்மில் பலர் தவித்து விட்டு, சும்மா இருந்து விடுகின்றனர். இப்படியே மற்றும் அநேக சந்தர்ப்பங்களில் எழுதத் தெரியாமல் சும்மா இருந்து விடுகின்றனர். இதை உத்தேசித்தே இன்ன சந்தர்ப்பங்களில் இன்ன இன்ன விதமாகக் கடிதங்கள் எழுத வேண்டும் என்று நூற்றுக்கணக்கான மாதிரிக் கடிதங்கள் கொடுத்து விளக்கப்பட்டிருக்கின்றன. பள்ளிச் சிறுவர்களுக்காகத் தயாரிக்கப்பட்டதெனினும் பெரியவர்களுக்கும் பயன்படக்கூடிய புஸ்தகம்.

பிரசுரம்: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, ஸ்ரீராம் பில்டிங்ஸ், 6, நல்லதம்பி தெரு, தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 1-8-0.

மே 31உ முதல்




சென்னை பிராட்வே, சித்ரா, சரஸ்வதி

மற்றும் தமிழ் நாடெங்கும்

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே தகருகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது



உங்கள் பாதங்கள் அதிகமாக வெடிப் படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணாகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை அழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ இடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப் படுகிறது. நிக்ஸோடெர்ம் உங்கள் பாத உபாதையைக் கட்டாயம் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன: (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்றுவிடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழு நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து இதமளிக்கிறது. (3) சருமத்தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.

### பரீக்ஷைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். இன்றிரவே ஒரு முறை போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்துவிடும். உங்கள் சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டால் உங்கள் பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையாவிட்டால் நிக்ஸோடெர்ம் மதிப்பை இழந்தாகிறது. இந்த உபத்திரவத்தின் பேரில், நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் போட்டு பரீக்ஷை செய்து பாருங்கள். உங்களுக்கு திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக்கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். அதற்கு அளிக்கப் பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.

---

## வீட்டில் சினிமா (புரொஜக்டர்)



இந்த எளிதான புரொஜெக்டரை எலெக்ட்ரிக் கரண்டினாலும், டார்ச் பேட்டரியினாலும் இயக்கலாம். திரையில் விழும் படங்கள் உயிருள்ளவை போலத் தோன்றும். உங்கள் வீடே சினிமா தியேட்டர்போல இருக்கும். பிலிம்கள் எல்லாம் மிக நவீனம். எல்லாவிடங்களிலும் கிடைக்கும். (35 m. m.) விலை ரூ. 12-8-0. வி.பி.பி. சார்ஜ் ரூ. 2-0-0 தனி. மேற்கொண்டு பிலிம் ஜெலும் 1-க்கு அணா 8.

## தானாகவே இயங்கி 6 தடவைகள் சுடும் பிஸ்டல்
(லைசென்ஸ் தேவை இல்லை)



தானாகவே இயங்கி ஆறு முறைகள் சுடும் ரிபீட்டர் டயனுடன் கூடியது. திருடர்களும் காட்டு மிருகங்களும் பயந்து நடுங்கும் அளவு பெரிய சத்தத்தையும், நெருப்பையும் கக்கும்; நாடகத்திற்கும், சர்க்கஸ்களுக்கும் மிக உபயோகமானது. விரோதிகள் எதிர்க்கும் சமயத்தில் உங்களுக்கு உற்ற தோழன். விலை ரூ. 5-5-0 வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-12-0 தனி. 12 ரவைகள் இலவசம். மேற்கொண்டு ரவை டஜன் ரூ. 1-4-0 பிஸ்டல் கேஸ் ரூ. 2-5-0.

## புதுமாதிரி அமெரிக்கன் சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்



உங்களது சிற்றுண்டி, டீ, லெக்சீர் முதலியவைகளை தயாரித்துக் கொள்ள மிகவும் உபயோகமானது. இந்த ஸ்டவ்விற்கு கொஞ்சம் ஸ்பிரிட் செலவு செய்தால் உங்கள் வேலையை பூர்த்தி செய்யும். ஒன்றின் விலை ரூ. 6-0-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

## எலக்ட்ரிக் & ரேடியோ கைட்

ரூ. 15 செலவில் உங்கள் சொந்த ரேடியோவை தயாரியுங்கள். வீட்டில் எலக்ட்ரிக் ஒயரிங், ரேடியோ ரிப்பேர் முதலிய எலக்ட்ரிக் சம்பந்தமானவைகள் எல்லாம் கற்றுக் கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை. ரூ. 4-0-0 தபால் செலவு ரூ. 0-12-0 தனி.

## 14 பாஷைகள் கற்கலாம்

குஜராத்தி, மராத்தி, தமிழ், பஞ்சாபி, ஹிந்தி முதலிய (14 பாஷைகளை) 49 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. போட்டோ கிராபிக் கலை ரூ. 3. சோப் செய்யும் முறை ரூ. 3. வாசனை திரவியங்கள் செய்யும் முறை ரூ. 3. தையல் & கட்டிங் ரூ. 3. டிராயிங் & பெயிண்டிங் ஆசான் ரூ. 4. சுக வாழ்வு ரூ. 3. ஒவ்வொரு புத்தகத்திற்கும் வி.பி.பி. சார்ஜ் அணா 12 தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படல் வேண்டும்

**MILAP TRADING CO., (P. 11) P.O. 21 ALIGARH. U.P. (INDIA)**



# தங்கப் பேனா!

ஹிந்திக் கதை: ஓங்கார்நாத் ஸ்ரீவாஸ்தவ்

மொழிபெயர்ப்பு: வாஞ்சி

"மாலதி இங்கே பார்! சுசில் நாளைக்கு வருகிறான், அவனுக்கு ஏதாவது அருமையான பட்சணம் தயார் செய்து வைக்க வேண்டாமா!" என்று சுசிலின் தாயார் கேட்டாள்.

"எல்லாம் எனக்குத் தெரியும். நீ பேசாமல் இரு" என்றாள் மாலதி.

மாலதியின் அலட்சியமான பதில் அவளுடைய தாயாரின் மனத்தைப் புண் படுத்தியது. அதே சமயம் அவளுக்கு ஆத்திரமும் பொங்கியது.

"மாலதி! நீ ஒரு பெரிய மக்கு. நாளைக்கு உன் அண்ணா வருகிறான். அவனுக்காக உயர்ந்த பட்சணம் ஏதாவது தயாரிக்க வேண்டாமா! உன் அண்ணாவைச் சாமான்யமாக நினைத்துக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது! அவன் டாக்டர் வேலை அல்லவா பார்க்கப் போகிறான்! கலெக்டர் உத்தியோகம், கம்பெனி மானேஜர் உத்தியோகம் இதையெல்லாம் காட்டிலும் டாக்டர் உத்தியோகம் பெரியது என்பது உனக்குத் தெரியுமா! அப்படிப்பட்டவனுக்குத் தகுதியான உயர்ந்த பட்சணம் ஏதாவது செய்து வைக்காமல் யாருடனாவது வம்புப் பேச்சு பேசிக் கொண்டிருக்கிறாயே!" என்று மிகவும் கடிந்து கொண்டாள் மாலதியின் தாயார்.

மாலதி, அவளுடைய தாயார், தந்தை, டாக்டர் தொழிலுக்காகப் படித்துக் கொண்டிருக்கும் மாலதியின் அண்ணன் சுசில் எல்லோருமே வீண் பெருமை அடித்துக் கொள்ளும் குணம் உள்ளவர்கள்; ஆடம்பரப் பிரியர்கள்.

"டாக்டர்கள் என்றாலே எனக்குப் பிடிப்பதில்லை. அவர்களைக் கண்டால் எனக்கு ஆத்திரமாக இருக்கிறது. அவர்களிடம் யாராவது சென்றால் கத்தியால் குத்துகிறார்கள். டாக்டர் என்றாலே அவர்களுடைய வீட்டுக் குழந்தை அலறுகிறது என்று என் தோழி சைலா சொல்கிறாள். சுசில் அண்ணா வந்ததும் டாக்டர் வேலைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிடு என்று சொல்லிவிடப் போகிறேன்" என்றாள் செல்வப் பெண் மாலதி!

இதைக் கேட்ட மாலதியின் தாயாருக்குக் கோபம் இன்னும் அதிகமாயிற்று.

"உங்கள் அண்ணா பெண் சொல்வதைக் கேட்டீர்களா!" என்றாள் மாலதியின் தாயார் தன் கணவருடைய சகோதரியிடம்.

பிறகு அவள் மாலதியைப் பார்த்து, "சுசிலுக்கு டாக்டர் உத்தியோகம் வேண்டாம் என்றால், உனக்குப் பெரிய இடத்தில் எப்படிக் கல்யாணம் நடக்கும்! உன் மூக்கிலும் காதிலும் கழுத்திலும் வைரங்கள் எப்படி ஜொலிக்க முடியும்!" என்றாள்.

அச்சமயம் அவர்களுடைய வீட்டில் இருந்த மாலதியின் அத்தையும் அதே ஊரில்தான் வசித்து வந்தாள். அவளுடைய பிள்ளை பாபுவா மகா புத்திசாலி. எம். ஏ. வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தான். அவன் தகப்பனார் இறந்து பல வருஷங்கள் ஆகிவிட்டன. சிறு வயதிலிருந்தே பாபுவாவுக்கு 'ஸ்காலர்ஷிப்' கிடைத்ததால் அவன் கலாசாலைப் படிப்பை எட்டிப் பிடிக்க முடிந்தது. இல்லாவிடில் மிக ஏழ்மையான அவனுடைய தாயார் அவனைப் படிக்க வைத்திருக்க முடியாது.

அவன் கலாசாலையில் சேர்ந்து கொண்ட பிறகு ஹைஸ்கூல் மாணவர்களில் சிலருக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுக்கத் தொடங்கினான். அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைத் தன் தங்கை வீணாவைப் பராமரிக்கும் தாயாருக்குத் தவறாமல் அனுப்பி வந்தான்.

பி. ஏ. வகுப்பில் முதன்மையாகத் தேறி, எம். ஏ. வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்த பாபுவா எதிர்காலத்தில் மிகவும் உயர்ந்த பதவிக்கு வருவான் என்று பேராசிரியர்கள் கூறினர்.

இதெல்லாம் பாபுவாவின் தாயாருக்குத் தெரியாது. அவன் செலவுக்குப் போதிய பணமின்றி ஏதோ கஷ்டப்பட்டுக் கொண்டு வாசித்து வருகிறான் என்று அவள் எண்ணி வந்தாள்.

தன் பெண் வீணா கல்யாண வயதை அடைந்து விட்டதால், அந்தக் கவலையும் அவளை வாட்டியது.

ஆனால் சுசிலின் தந்தையோ ராய் பரேலி நகரில் பிரபல ஜமீன்தார். அவர் காலத்தில் அவரது சொத்து பெரிதும் கரைந்து விட்டதெனினும், ஜமீன்தார் என்ற பட்டப் பெயருக்கு

யாதொரு குறையும் ஏற்படவில்லை! அந்த ஜில்லாவில் அவரை அறியாதவர் யாருமில்லை. அவர் பிறந்தது முதல் சாப்பிடுவது, தூங்குவது இந்த இரண்டு வேலையைத் தவிர வேறு எதுவும் செய்தறியார். அவரது குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவருடைய பேச்சும், பார்வையும், நடையும், உடையும், பாவனையும் 'நாங்கள் பணக்காரர்கள்' என்று உலகத்துக்குப் பறைசாற்றி வந்தன!

"கசில் எவ்வளவு ஆடம்பரமாக வாழ்கிறான்! அவனுக்கு வேண்டிய பணம் கிடைக்கிறது. என் குழந்தை பாபுவா தன் வயிற்றையும் வாயையும் கட்டிக் கொண்டு எனக்கும் வீணுவுக்கும் பணம் அனுப்புகிறானே" என்று மாலதியின் அத்தை அடிக்கடி தனக்குள் அங்கலாய்த்துக் கொள்வாள்.

"கசில் காலேக்கு வருகிறானு! எனக்கு அவனைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. கசிலைப் போல டாக்டர் வேலைக்கு வாசிக்கக் கூடாதா என்று பாபுவானைக் கேட்டேன். அவன் எந்த வேலைக்கு வாசித்துக் கொண்டிருக்கிறான் என்பதே எனக்குத் தெரியாது. அவன் கலாசாலைப் பேராசிரியர் வேலைக்குப் போவான் என்று கேள்விப் படுகிறேன். டாக்டர் உத்தியோகத்தைப் போல் அதுவும் உயர்ந்த உத்தியோகம் தானே!" என்று கேட்டாள் கசிலின் அத்தை.

உடனே கசிலின் தாயார் ஏளனமாக வாயைக் கோணிக் கொண்டாள். "டாக்டர் உத்தியோகம் எங்கே! உபாத்தியாயர் உத்தியோகம் எங்கே! யானை எங்கே! பூனை எங்கே!" என்றாள் அவள்.

அவ்வாறு தான் அசட்டுத் தனமாகக் கேட்டதைக் குறித்துப் பாபுவாவின் தாயார் வெட்கித் தலை குனிந்தாள். அவளுக்கு அழுகை வந்து விடும் போலிருந்தது. கசிலின் தாயாருடைய மமதைப் பேச்சு அவள் மனதைப் புண்படுத்தியது.

குணம், படிப்பு, மேதை எல்லாவற்றிலும் பாபுவா கசிலைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகமானவன் என்பது அந்த ஊராருக்குத் தெரியும். ஆனால் காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு என்பது போல, கசிலைக் காட்டிலும் உயர்ந்தவன் அந்த ஊரிலேயே இல்லை என்பது கசிலின் தாயாருடைய அபிப்பிராயம்!

எனவே கசிலையும் பாபுவாவையும் சம நிலையில் வைத்துப் பாபுவாவின் தாயார் பேசியது அவளுக்கு (கசிலின் தாயாருக்கு) மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கியது. அதற்குப் பிறகு அவள் பாபுவாவின் தாயாருடன் முகம் கொடுத்தே பேசவில்லை!

* * *

மறு நாள் மாலதியின் வீடு முழுவதும் அமளி துமளிப் பட்டது.

"மாலதி! நீ நல்ல பட்டுப் புடவையை எடுத்துக் கட்டிக் கொள். குழந்தை அச்சிக்கும் (மாலதியின் தங்கை) பாவாடை கட்டி விடு...சேவகர்கள் எங்கே! அவனைச் சீக்கிரமாக வண்டியைக் கட்டிக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போகச் சொல்லு... ரயில் வண்டி ஒன்பது மணிக்கு வருகிறதாம்... உன் அப்பா வழக்கம் போல் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாரே. இன்றைக்காவது சீக்கிரம் எழுந்திருக்கக் கூடாதா!...'விடியற்காலம் எழுந்திருப்பதற்காக உன் அப்பாவுக்கு ஏதாவது மருந்து கொடு' என்று கசில் வந்தவுடன் நான் சொல்லப் போகிறேன்...!"

இப்படியெல்லாம் மாலதியின் தாயார் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தாள். கசில் வரப் போவதைக் குறித்து அவளுக்குப் பெருமை தாங்க முடியவில்லை.

"ஊரே அதிர்ந்து விடும் போல் ஏன் இப்படி கத்துகிறாய்! காலையில் நன்றாகத் தூங்காவிட்டால் என் உடம்பு கெட்டுவிடும். இரவு முழுவதும் விழித்துக் கொண்டிருப்பதற்கு, நான் என்ன காவற்காரனு!" என்றார் மாலதியின் தந்தை பங்கு பாபா.

"டாக்டரின் தகப்பனார் நாள் முழுதும் இப்படித் தூங்கி வழிந்து கொண்டிருக்கக் கூடாது. உங்களுடைய குணம் தான் உங்கள் பெண் மாலதிக்கும் படிந்திருக்கிறது......மாலதி! கசில் வந்ததும் உன்னை என்ன பாடுபடுத்தப் போகிறான், பார்" என்று கடிந்து கொண்டாள் வீட்டு எஜமானி.



"கசில் என்ன செய்வான்! மாலதியின் தலையைக் கிள்ளி விடுவானே!" என்று கேட்டார் வீட்டு எஜமானர்.

குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த சேவகர்களை வேலைக்காரர்கள் எழுப்பி வந்தனர்.

பட்டுப் பாவாடை உடுத்திக் கொண்டிருந்த அச்சி காரணமில்லாமல் விசித்து விசித்து அழத் தொடங்கினாள். மாலதி பிரமாத ஆடம்பரத்துடன் தன்னை அழகுசெய்துகொண்டிருந்தாள்.

கசிலைப் பார்க்க வேண்டும் என்று பாபுவாவின் தாயாரும் தங்கை வீணுவும் வந்திருந்தனர்.

கடைசியில் கசில் வந்து சேர்ந்தான். வண்டியை விட்டுக் கீழே இறங்கினான். மாலதியும் அச்சியும் சந்தோஷம் தாங்க முடியாமல் உரக்கக் கத்திக் கொண்டு கூத்தாடினார்கள்.

"கசில்! உள்ளே வா" என்றார் பங்கு பாபா.

"உன் செலவுக்குப் பணம் போதவில்லையா! ஏன் இப்படி இளைத்து விட்டாய்!" என்று அவன் தாயார் அன்பு ததும்பக் கேட்டாள்.

"உன்னைப் பார்த்துப் பல மாதங்கள் ஆகி விட்டன" என்றாள் சசியின் அத்தை.

சசி யாரையும் லட்சியம் செய்யாதவன் போல் உள்ளே வந்தான். 'அழுமூஞ்சி அச்சி' என்றும் 'மக்கு மாலதி' என்றும் தங்கைகளைச் சிறிது நேரம் கொஞ்சினான்!

ஏழைகளான அத்தையுடனும் வீணாவுடனும் அதிகமாகப் பேச அவன் விரும்பவில்லை.

"பாபுவா கூட நேற்றுத் தான் வந்தான். இன்னும் சிறிது நேரத்தில் உன்னைப் பார்க்க வருவதாகச் சொன்னான்" என்றாள் அவன் அத்தை.

"ஓகோ!" என்று மாத்திரம் சொல்லி விட்டுச் சசி ஸ்நானம் செய்வதற்கு ஆயத்தம் செய்தான்.

"உனக்காக இந்தப் பட்சணம் தயார் செய்திருக்கிறேன். இதையும் காப்பியையும் சாப்பிட்டு விட்டுப் பிறகு ஸ்நானம் செய்யலாம்" என்றாள் சசியின் தாயார்.

"அம்மா, எனக்கு இதெல்லாம் பிடிக்காது. நான் ஸ்டேஷன் ஹோட்டலில் எல்லாம் சாப்பிட்டு விட்டேன்" என்று கூறி முகத்தைச் சுளித்துக் கொண்டான் சசி.

பாபுவாவின் தாயார் அவனை விடவில்லை. "உன் டாக்டர் படிப்பு முடிய இன்னும் எத்தனை வருஷங்கள் ஆகும்!" என்று கேட்டாள்.

"இன்னும் ஒரே ஒரு வருஷம்தான் இருக்கிறது" என்றான் சசி.

"என் சசி இன்னும் ஒரு வருஷத்துக்குள் டாக்டர் உத்தியோகம் பார்க்கப் போகிறான். பிறகு அவன் டாக்டர் கோஷைப்போல் தங்கப் பேனாவைத்தான் உபயோகிப்பான்" என்றாள் சசியின் தாயார் குதூகலத்துடன்.

"இல்லை, அம்மா! இப்போதே நான் தங்கப் பேனாவை உபயோகிக்க ஆரம்பித்து விட்டேனே! இதோ பார்!" என்று சொல்லிச் சசி தன் சட்டைப்பையிலிருந்து தங்கப் பேனாவை எடுத்து எல்லோருக்கும் காட்டினான்.

அதைப் பார்த்ததும் சசியின் தாயாருக்கு மகிழ்ச்சி பொங்கியது. மற்றவர்கள் யாவரும் சசி ஏதோ பிரமாதமான காரியத்தைச் சாதித்து விட்டதுபோல், அந்தப் பேனாவையும் அவனையும் மாறி மாறிப் பார்த்தனர்.

"இதன் விலை என்ன!" என்று கேட்டாள் சசியின் தாயார்.

"இதன் விலை 140 ரூபாய் அம்மா!" என்றான் சசி பெருமையுடன். பிறகு அவன் தான் வாங்கியிருந்த தங்கக் கெடிகாரத்தையும் எடுத்துக் காட்டினான்.

இச்சமயத்தில் பாபுவாவின் தாயார் தன் மகனை நினைத்துக் கொண்டாள்.

"பாபுவா ஏன் தங்கப் பேனா வாங்கி வைத்துக் கொள்ளவில்லை! தங்கக் கைக் கெடிகாரம் ஏன் வைத்துக் கொள்ளவில்லை! ஆடம்பரமாக ஏன் உடைகள் அணிவதில்லை! அவன் கையில் உள்ள பணத்தை யெல்லாம் எனக்கும் வீணாவுக்கும் அனுப்பி விடுகிறான். அவன் எப்படி தங்கப் பேனா வாங்க முடியும்! 'இனி எங்களுக்குப் பணம் அனுப்பவேண்டாம்' என்று அவனிடம் கண்டிப்பாகச் சொல்லி விட வேண்டும். நாங்கள் இங்கு எப்படி யாவது கஷ்டப்பட்டுக் கொண்டு காலம் கழிக்கிறோம். எங்களுக்காக, படிக்கிற பிள்ளை தன் சௌகரியங்களை யெல்லாம் குறைத்துக் கொண்டு விடுவதா! பாபுவாவும் சசியைப்போல் குதூகலமாக இருக்க வேண்டாமா!"



இவ்விதம் பாபுவாவின் தாயாருடைய மனம் பல்வேறு எண்ணங்களுக்கு இரையாகியது.

"சசி, நீ லக்ஷ்மணபுரியில்தானே படிக்கிறாய்!" என்று பாபுவாவின் தாயார் கேட்டாள்.

"ஆமாம்" என்றான் சசி.

"அங்கே ரொம்பவும் செலவாகுமோ!" என்றாள்.

"பெரிய டவுனில் படித்தால் செலவுக்குக் கேட்பானேன், அத்தை!" என்றான் சசி.

'பாபுவாவும் பெரிய பட்டணமான அலகாபாத்திலதானே வாசிக்கிறான்! அவனுக்கு எவ்வளவு செலவாகும்!' என்று சசியின் அத்தை தன் மனதில் நினைத்துக் கொண்டாள்.

* * *

சசியின் வீட்டுக்குச் சென்றிருந்த பாபுவாவின் தாயாரும் வீணாவும் தங்கள் வீட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்தனர்.

சிறிது நேரம் கழித்துக் காய்கறிகள் வாங்குவதற்காகச் சென்றிருந்த பாபுவாவும் திரும்பி வீட்டுக்கு வந்தான். அவனது ஆடம்பரமற்ற கதர் உடையையும் அவன் கையில் வைத்துக் கொண்டிருந்த பையையும் பார்த்தபோது அவனுடைய தாயாருக்கு மனதை என்னவோ செய்தது.

"சசி வந்துவிட்டானே! நீ போய்ப் பார்த்தாயோ!" என்றாள் அவள்.

"இனிமேல்தான் அம்மா போய்ப் பார்க்க வேண்டும்" என்றான் பாபுவா.

"பாபுவா! உன் படிப்பு முடிய இன்னும் எத்தனை நாள் ஆகும்!"

"இன்னும் மூன்று மாதத்தில் முடிந்துவிடும். ஏன் அவ்விதம் கேட்கிறாய்!"

"சாதாரணமாகத்தான் கேட்டேன்...ஆமாம், நீ இப்போது பி. ஏ. தானே வாசித்துக் கொண்டிருக்கிறாய்!"

"இல்லை, அம்மா! எம். ஏ. வகுப்பில் வாசிக்கிறேன். பி. ஏ. பரீட்சையில் முதலில் தேறிப்



"உங்கள் ஆபீஸ் சாமான்களைத் திருட்டு, விபத்திலிருந்து பாதுகாப்பதற்கு இன்ஷ்யூர் செய்ய விருப்பம் இல்லையா?"

"ஆகா, ஆபீஸ் கடிகாரத்தைத் தவிர மற்ற எல்லாவற்றையும் இன்ஷ்யூர் செய்ய வேண்டியதுதான்!"

"ஆபீஸ் கடிகாரத்தை மட்டும் ஏன் இன்ஷ்யூர் செய்ய வேண்டாம் என்கிறீர்கள்?"

"ஆமாம், கடிகாரத்துக்கு எந்த விபத்தும் நேராது. என் ஆபீசில் வேலை செய்யும் அத்தனை பேரும்தான் அதையே பார்த்துக் கொண்டிருக்கிறார்களே!"

---

பரிசு வாங்கினேனே, அதற்குள் மறந்துவிட்டாயா, என்ன!" என்றான் பாபுவா.

"இப்போதுதான் எனக்கு ஞாபகம் வந்தது. கலீஜ் காட்டிலும் நீ உயர்ந்த வகுப்பில் வாசிக்கிறாய் அல்லவா!"

"ஆமாம்."

உடனே பாபுவாவின் தாயார் விம்மத் தொடங்கி விட்டாள்.

"ஏன் அம்மா அழுகிறாய்!" என்றான் பாபுவா பரபரப்புடன்.

"நீ செலவுக்குக் கஷ்டப் படுகிறாயோ! எங்களுக்கு நீ இனிமேல் பணம் அனுப்ப வேண்டாம்" என்றாள் விம்மிக்கொண்டே.

"எனக்கு வேண்டிய பணம் கிடைக்கிறது, அம்மா! நீ சிறிதும் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை" என்று பாபுவா தன் தாயாரை அன்புடன் தேற்றினான்.

• • •

பாபுவா அலகாபாத்துக்குச் சென்ற பின் அவன் தாயார் அடிக்கடி அவனைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். அவள் எழுதிய கடிதங்களில் அவனுடைய தேக நிலையைப் பற்றி விசாரித்திருந்ததன் மர்மம் என்ன என்பதை அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. "எங்களுக்குப் பணம் அனுப்ப வேண்டாம்" என்று இப்போதெல்லாம் அவன் தாயார் அடிக்கடி கடிதம் எழுதியதன் மர்மமும் அவனுக்குப் புலனாகவில்லை. தான் செலவுக்குப் போதாமல் மிகவும் கஷ்டப்படுவதாக யாராவது தன் தாயாரிடம் சொல்லி யிருப்பார்களோ என்று எண்ணினான். கலீஜ் வீட்டில் நடந்த சம்பவம் எதுவும் பாபுவாவுக்குத் தெரியாது அல்லவா!

பாபுவா எம்.ஏ. பரீட்சைக்கு எழுதிய பின், தான் ஊருக்குப் போவதா, வேண்டாமா என்று தயங்கிக் கொண்டிருந்தான். 'ட்யூஷனி'ல் அவனுக்கு அப்போது அதிக வருமானம் கிடைத்து வந்தது. தவிர, வீணுவுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டிய பொறுப்பையும் கடமையையும் அவன் உணர்ந்திருந்தான்.

அவனுடைய மேதையை அறிந்த அவன் கலாசாலைப் பிரின்ஸிபால் அவனை வேறொரு கலாசாலையில் பேராசிரியர் பதவிக்குச் சிபார்சு செய்திருந்தார்.

இந்நிலைமையில் தன் தாயாரிடமிருந்து ஒரு கடிதமும் இருநூறு ரூபாய் பணமும் வந்ததைக் கண்டு அவன் திகைத்துப் போனான். அவன் தாயாருக்கு அவன் பணம் அனுப்பவேண்டியிருக்க, அவள் அவனுக்கு ஏன் பணம் அனுப்ப வேண்டும்!

கடிதத்தைப் படித்ததும் அவனுக்கு விஷயம் ஒருவாறு புரிந்தது. "உனக்கு ஒரு தங்கப் பேனாவும் தங்கக் கைக்கெடியாரமும் மிகவும் அவசியம். அதற்காக இருநூறு ரூபாய் அனுப்பி யிருக்கிறேன்" என்று அவன் தாயார் தன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள்.

தன் மீது தன் தாய்க்கு உள்ள பாசத்தைக் கண்டு அவன் மனம் உருகியது. தன் குடும்பத்தில் உள்ள பணக் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் அவன் தாய் எவ்வளவு சிரமப்பட்டு அந்தத் தொகையை அனுப்பி யிருக்கிறாளோ!

ஊருக்குப் போவதா, வேண்டாமா என்ற விஷயத்தில் அவனுக்கு இருந்த தயக்கம் அதே வினாடியில் அகன்றது. தன் தாயாருக்காகவும் வீணுவுக்காகவும் சில முக்கிய சாமான்களை வாங்கிக் கொண்டு அன்றிரவு ரயில் வண்டியிலேயே ஊருக்குப் புறப்பட்டு விட்டான்.

பாபுவா ஊருக்கு வந்ததும் வராததுமாக அவன் தாயார் அவனைப் பார்த்து, "நீ தங்கப் பேனாவும் தங்கக் கெடியாரமும் வாங்கிக் கொண்டாயோ!" என்று ஆர்வத்துடன் கேட்டாள்.

"எனக்கு அவை தேவையில்லை, அம்மா! என்னிடம் ஒரு பேனாவும் கெடிகாரமும் ஏற்கெனவே இருப்பது உனக்குத் தெரியாதா! இதோ பார். நீ அனுப்பிய பணத்துடன் என்னிடமிருந்த தொகையையும் சேர்த்து வீணுவுக்கு ஒரு ஜோடி வைரக் கம்மலும் பட்டுப் புடவையும் வாங்கி வந்திருக்கிறேன்" என்றான் பாபுவா.

வீணுவுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அவன் தான் ஒரு பெரிய உத்தியோகம் வகிக்கும் இளைஞனுக்கு அப்போதே வாழ்க்கைப் பட்டிருப்பதுபோல் எண்ணிக் கொண்டாள்.

பாபுவாவின் தாயாருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அவளால் பேச முடியவில்லை.

அவள் உள்ளே வைத்திருந்த தன் பழைய தோட்டை விற்றுப் பாபுவாவுக்கு இருநூறு ரூபாய் அனுப்பி யிருந்தாள். பாபுவாவோ தன்னிடமிருந்த தொகையையும் சேர்த்து வீணுவுக்கு வைரக் கம்மல் வாங்கிவந்ததை நினைக்க நினைக்க அவளுக்கு மகிழ்ச்சி பொங்கியது.

"ஏன் அம்மா! எதற்காக அழுகிறாய்!" என்றான் பாபுவா ஒன்றும் புரியாமல்.

"அப்பா, என் கண்ணே! உன்னைப் போன்ற உத்தமனை ஒரு பிள்ளையைப் பெற்ற நான் எதற்கு அழவேண்டும்! நான் அழவில்லை, ஆனந்தம் அடைகிறேன்" என்று பாபுவாவை அன்புடன் தழுவிக் கொண்டாள் அவன் தாயார்.

# கசப்பில்லை — வாசனை இல்லை




ஸ்வஸ்திக்

MEDICINAL CASTOR OIL

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்.,
வடாலா, பம்பாய்

SOM 192

# தளர்ச்சி, உடல் பலஹீனம் ஆரோக்கியமின்மை ஆகியவைகளுக்கு

வியாதியால் வலுவிழந்து மெலிந்து, பலமின்றி இருப்பவர்கள் மீண்டும் சக்தி பெற்று பலமடைய ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) ஓர் மிகச் சிறந்த சாதனமென்பதை தெரிந்து கொள்வார்கள். வலுவூட்டுவதிலும் பசியூட்டுவதிலும் மற்றும் ஜீரண சக்தி அளிப்பதிலும் இதற்கு மிஞ்சியது வேறு ஒன்றுமில்லை.

எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்



**ANGIER'S EMULSION**

---

## உங்கள் காலில் உள்ள

**Zam-Buk** தொந்தரவுகளை ஜாம்-பக்

## எவ்வளவு விரைவில் குணப்படுத்துகிறது என்று பாருங்கள்!





ஜாம்-பக் நோயுற்ற காலில் உள்ள புண்களை மாயமாய் மறையச் செய்கிறது.

உங்கள் கால்களில் ஜாம்-பக்கைப் போட்டுத் தேய்த்து விடுங்கள். வலி, அயர்ச்சி, நோய் எல்லாம் விரைவில் ஓடிப்போகும். ஹிதம் தந்து குணப்படுத்தும் சிறந்த ஔஷதத் தைலங்கள் ஜாம்-பக்கில் இருக்கின்றன. ஜாம்-பக் எரிச்சலையும், வீக்கத்தையும் போக்கடிக்கிறது. ஜாம்-பக் கொப்புளங்களை குணப்படுத்துகிறது. ஜாம்-பக் கால் ஆணியை அகற்ற உதவும். ஜாம்-பக் உங்கள் கால்வலிகளைக் குணப்படுத்துகிறது. மற்றும் கமைச்சல், இதர சரும நோய்கள், வெட்டுப் புண்கள், காயங்கள், புண்கள், ரணங்கள், செருப்புக் காயங்கள், மண்டைச் சொறி, பூச்சிக்கடி மூலம் முதலியவற்றிற்கு ஜாம்-பக் உபயோகிக்கலாம்.



ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மெண்ட் மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்று உத்தரவாதம்

FZY 3

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி.டி. மதராஸ்



# விமானப் படை வேணு

**"தொழிற் பித்தன்"**

என்னை எல்லோரும் பரதேசி என்று சொன்னார்கள். உண்மையில் நான் ஒரு பண்டாரமே தான். ஆனால் உலகத்தின் இச்சைகள் என்னை விட்டு அகன்று விடவில்லை. ஆசாபாசங்களை விட்டு நான் தூர ஓடிப்போகவில்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்கிறேன்; நான் வாழ்க்கையில் வெறுப்படைந்து பெண்டாட்டி பிள்ளைகளை உதறி எறிந்து விட்டுச் சன்யாசம் வாங்கிக் கொள்ளவில்லை. காதலித்த பெண் கைக்குக் கிட்டாமல் போய் விட்டாள் என்ற ஆத்திரத்தில் வாழ்க்கையில் விரக்தி அடைந்து பண்டாரமாக மாறவில்லை. ஏனென்றால் என் பரம்பரையே பண்டாரப் பரம்பரை. வாழையடி வாழையாக நான் பரதேசி. ஆகவே நல்ல ருசியுள்ள ஆகாரங்கள் கிடைத்தால் நன்றாகச் சுவைத்துச் சாப்பிடுவேன். யாராவது காதல் கதைகள் சொன்னால் சந்தோஷமாகக் கேட்பேன். சமயத்தில் நான் சினிமாக்களுக்குக் கூடப் போவேன். இவ்வளவு ஆசாபாசங்களுக்கு ஆளாகி இருந்த நான் காவி வேஷம் போட்டுக் கொண்டிருக்க வேண்டியதில்லைதான். ஆனால் வயிற்றுப் பிழைப்புக்கு ஒரு வழி ஏற்படவில்லையே! என்ன செய்வது! அதனால்தான் நான் பரதேசியாய் இருந்தேன்.

அன்று ஊரெல்லாம் சுற்றியும் ஆகாரம் எதுவும் கிடைக்கவில்லை. ஆகவே, அருகிலிருந்த சத்திரத்துத் திண்ணைக்குச் சென்று படுத்தேன். கண்களை மூடித் தூங்கலாம் என்று பார்த்தால் தூக்கம் வந்தால்தானே! வயிற்றைப் பசி கிள்ளி எடுத்துக் கொண்டிருக்கும்பொழுது தூக்கம் எங்கிருந்து வரும்! பக்கத்தில் யாரோ கனைப்பது கேட்டது. கண்களைத் திறந்து பார்த்தேன். என்னைப் போலவே ஒரு சாமியார் உட்கார்ந்திருந்தார். ஆனால் அவர் எனக்குப் பழக்கமில்லாதவர். 'நமக்கென்ன! யாராவது வந்துவிட்டுப் போகட்டும்!" என்று நான் இருந்திருக்கலாம். ஆனால் அந்தப் பரதேசியின் கையிலிருந்த சிறு மூட்டை என்னும் காந்தம் என் வயிற்றுப் பசியாகிற இரும்பைக் கவ்வி இழுத்தது.

"சாமிக்கு எந்தப் பக்கமோ!" என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தேன்.

"நமக்கு வடக்கே டெல்லிப் பக்கம்!" என்று சொல்லிவிட்டுச் சாமியார் உதட்டைக் கடித்துக் கொண்டார்.

"அவ்வளவு தூரத்திலிருந்தா சாமி, இந்த வறண்ட பூமிக்கு வந்திருக்கிறீர்கள்!" என்று கேட்டவாறே அவர் மூட்டையை ஆவல் தவழப் பார்த்தேன். குறிப்பறிந்த சாமியார் சிரித்துக் கொண்டே மூட்டையை என் பக்கம் நகர்த்தி வைத்தார். நான் அவசரம் அவசரமாக அந்த மூட்டையை அவிழ்த்து அதற்குள் இருந்த ஆறு இட்டிலிகளையும் ஒன்றன் பின் ஒன்றாக விழுங்கத் தொடங்கினேன். சாமியார் சிரித்தார். "உலகத்தை வெறுத்து உதறித் தள்ளும் நம்மைப் போன்ற சந்நியாசிகளுக்கு இந்த வயிற்றையும் வாயையும் கடவுள் படைத்திருக்கிறது ரொம்பத் தப்பு இல்லையா!"—இந்தமாதிரி ஆராய்ச்சியில் சாமியார் இறங்கியதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. மீதியிருந்த ஒன்றரை இட்டிலியை ஒரே வாயாக விழுங்கி விட்டு நான் சாமியைப் பார்த்தேன். அவர் புன் சிரிப்புடன் வீற்றிருந்தார். "சாமி விரக்தியாய்ப் பேசுகிறதைப் பார்த்தால் பெரிய ஸ்திதியிலிருந்து கீழே வந்துவிட்டாற் போல் தோன்றுகிறது!" என்றேன்.

"இந்த உலகத்திலுள்ள எல்லா ஜடப் பொருள்களுக்கும் அடிக்கடி மாற்றங்கள் இருந்துகொண்டே இருக்கின்றன. அதற்கு மனிதர்கள் மட்டும் விதிவிலக்கா என்ன! மனிதர்களும் மாறிக் கொண்டே தான் இருக்கிறார்கள். அவர்களுடைய மாற்றங்களுக்குத் தகுந்த மாதிரி மனமும் சலனப்பட்டுக் கொண்டே போகிறது. இன்றைக்கு ராஜாவாயிருக்கிறவன் நாளைக்கு ஆண்டியாய்ப் போகிறான். இன்றைக்குப் பரதேசியாயிருக்கிறவன் நாளைக்கு அரசனாகிறான்"—சாமியார் இவ்வாறு பூர்வபீடிகையுடன் ஆரம்பித்ததும் அவர் ஒரு கதை சொல்லப் போகிறார் என்பதைத் தெரிந்து கொண்டேன்.



இந்திய ராணுவ விமானப் படையின் தலைமைக் காரியாலயமும், பெரிய 'காம்ப்' ஒன்றும் பழைய தில்லியில் 'கனாட் சர்க்கின்' என்ற இடத்திலே அமைந்திருந்தது. அந்தக் 'காம்பி'ல் விமானப் படையைச் சேர்ந்த சில மதராஸிகள் இருந்தார்கள். அவர்கள் சாப்பிடுவது, அரட்டை அடிப்பது, சீட்டாடுவது முதலிய எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்ந்தே செய்வார்கள். அந்த மதராஸிகளுள் தென்னாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த வேணு என்ற ஒரு வாலிபன் இருந்தான். அவனுக்கு இயற்கையிலேயே சில கெட்ட சுபாவங்கள் உண்டு. அவன், தான் என்கிற அகம்பாவமும் யாரையும் பரிகாசம் செய்யும் மனப்பான்மையும் படைத்தவன். அவன் ஒரு உல்லாசப் பேர்வழி. தென்னாற்காடு ஜில்லாவில் அவனுடைய உற்றார் உறவினர் எவருமே கிடையாது. அவனது தாய் தகப்பன்மார் பரலோகம் போய் எத்தனையோ வருஷங்கள் ஆகி இருந்தன. வேணு விமானப் படையில் சேர்ந்து நிறைய சர்வீஸ் ஆகி இருந்தது

ஒரு நாள் வேணு 'பரேடு' முடிந்து தன் 'குரூப்'புடன் வந்து கொண்டிருந்தான். காலை நேரம். தன் பிறந்த நாட்டின் பெருமையைப் பற்றியும், தென்னாற்காடு ஜில்லாவின் வளத்தைப் பற்றியும், தன் வடக்கத்தி நண்பர்களிடம் சவடால் அடித்துக் கொண்டே வந்து கொண்டிருந்தான் வேணு. அப்பொழுது எதிரே ஒரு பிச்சைக்காரன் தளர்ந்த நடையுடன் வந்து அவர்கள் முன்னால் நின்று, "பாபு! சலாம், பாபு! பசிக்கிறது, பாபு! பைசா கொடுங்கள், பாபு!" என்று ஹிந்துஸ்தானியில் காலணாவுக்கு மன்றாடினான். வேணு அலட்சியமாகத் திரும்பினான். தன் வடக்கத்தி நண்பர்களைப் பார்த்து அவன், "பார்த்தீர்களா! உங்கள் ஊரிலே பிச்சைக்காரர்கள் உபத்திரவம் பொறுக்கவே முடியவில்லையே! எங்கள் தமிழ் நாட்டில் பிச்சைக்காரர்கள் உண்டு. ஆனால் அவர்களும் நாகரிகமாக இருப்பார்களே தவிர இவனைப் போல காட்டு மிராண்டியாக இருக்க மாட்டார்கள்! தமிழ் நாட்டின் மாதிரியே தனி!" என்றான். அந்தப் பிச்சைக்காரன் வேணுவின் பக்கம் திரும்பிச் சுத்தமான செந்தமிழில் "நானும் தமிழன்தான், ஐயா!" என்றான். வேணுவுக்குச் சுர்ர் என்றது. என்னடா இவன் இப்படி எக்கச்சக்கமாய் நம்மை அவமானப்படுத்தி விட்டானே என்று அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்தான். பார்வையிலேயே வெட்டி விடுவது போல். இச் சந்தர்ப்பத்தில் நாம் ஏதாவது பேசினால் நண்பர்கள் குறைவாக நினைத்துக் கொள்ளப் போகிறார்களே என்று ஒரே வார்த்தையில் இன்ன இடத்திலே நாளைக்கு வந்து என்னைப் பார் என்று விலாசத்தைக் கொடுத்து விட்டு அகன்றான் வேணு.

வேணு ஒரு மாதிரியான ஆசாமி. தன்னையும் தன் நாட்டவர்களையும் பற்றி எல்லோரும் மிக உயர்வாக எண்ண வேண்டும் என்பது அவனுடைய திடமான அபிப்பிராயம். அப்படி இருக்க இந்தப் பாவிப் பிச்சைக்காரன் வந்து தன் அசங்கியமான தோற்றத்தால் தன் கௌரவத்தையே குறைத்து விட்டானே என்று மனம் புழுங்கினான். நாளைக்கு அவன் வந்தால் அவனுடைய வாழ்க்கைத் தரத்தை எப்படியாவது உயர்த்தி அவனை நாலு பேருக்கு நடுவில் நிமிர்ந்து நடக்கும்படி செய்துவிட வேண்டும். அதற்கு என்ன செய்யலாம் என்று தீர்க்கமாக ஆலோசனை செய்தான். கடைசியாக 'பாரக்'கிற்குப் பக்கத்தில் ஒரு பெட்டிக் கடையை வைத்துக் கொடுத்து அவனுக்குப் பிழைக்க வழி செய்ய வேண்டும். ஆனால் வேறு எவருக்குமே தெரியக் கூடாது அது என்று நிச்சயம் செய்தான்.

வேணு பிடிவாதக்காரன். நினைத்த காரியத்தை எந்தப் பாடு பட்டாயினும் நிறைவேற்றாது விட மாட்டான். ஆகையால் அவன் தன் மதராஸி நண்பர்களைக் கலந்து ஆலோசித்தான். அவர்களும் ஆட்சேபனை எதுவும் சொல்லவில்லை. தங்களால் இயன்ற அளவு தொகை கொடுத்து உதவியும் செய்தார்கள். வேணு மறுநாள் 'பாரக்'கிற்கு அருகில் அவன் பார்த்து வைத்திருந்த பெட்டிக் கடையை விலைக்கு வாங்கினான். அதற்கு 'லைசென்ஸ்' முதலானவைகளையும் தானே முயற்சி செய்து பெற்றான். பிறகு அவன் அந்தப் பிச்சைக்காரனின் வரவை ஆவலோடு எதிர்நோக்கிக் காத்திருந்தான். பிச்சைக்காரன் இரண்டு நாள் கழித்து சொன்னபிரகாரம் வந்து சேர்ந்தான்.

'ஏய்! நீ என்னுடைய மதிப்பையே குறைத்து விட்டாய். இரண்டாயிரம் மைல்களுக்கு அப்பா லுள்ள தமிழ் நாட்டிலிருந்து வந்து டெல்லியில் பிச்சை எடுக்கிறாயே, உனக்கு வெட்கமா யில்லை! ஏதாவது பிழைப்பைத் தேடிக்கொள்ளக் கூடாது! என் ஆபீஸர் உன் மாதிரி பிச்சைக்காரர்களைக் கண்டால் சுட்டுத் தள்ளிவிடுவார். இதோ, பார்! உனக்காக ஒரு பெட்டிக் கடையை வாங்கி இருக்கிறேன். இதை வைத்துக் கொண்டு வியா பாரம் நடத்தி உன் வாழ்க்கையை நிறுவிக் கொள். தெரிந்ததா!'' என்று மூச்சுவிடாமல் பேசி நிறுத்தினான் வேணு. எங்கே அந்தப் பிச்சைக் காரன் தன் சோம்பேறித்தனத்தால் 'மாட்டேன்' என்று சொல்லி விடப் போகிறானோ என்ற பயம் வேறு உள்ளூற அவனுக்கு இருந்தது. ஆனால் அந்தப் பிச்சைக்காரனின் கண்களிலே நீர் வழிந்து ஓடிற்று. அவன் வேணு காட்டிய அன்பு மிகுதியினால் திணறிப் போய், "சார்! நீங்கள் தெய்வந்தானுங்க!'' என்றான்.

நேற்று வரை பிச்சைக்காரனாயிருந்தவன் இன்று வேணுவின் உதவியினால் ஒரு பெட்டிக்கடை முத லாளியானான். வருகிறவர்களிடம் போகிறவர் களிடமெல்லாம் அவன் வேணுவின் தயாள சிந்தையைப் பற்றிப் பேசலானான். இப்படி அவன் ஒரு வங்காளி விமானியிடம் பேசிக் கொண் டிருந்ததாக வேணுவின் காதிலே விழுந்தது. அவனுக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. 'மதராஸிகள் புத்திசாலிகள்! அவர்களின் அபார சாமர்த்தியத்தால் எப்படியும் பிழைத்துக் கொள் வார்கள் என்ற கியாதியை இந்தப் பயல் தன் பெயரைச் சொல்லிச் சொல்லிக் கெடுத்துக் கொண்டிருந்தது அவனுக்குக் கட்டோடு பிடிக்க வில்லை. நேராக அவன் அந்தப் பெட்டிக் கடைக் குப் போனான். அந்த மாஜி பிச்சைக்காரன் வணக்கத்துடன் எழுந்து நின்றான். வேணு, "ஏய்! என்னால்தான் நீ முன்னுக்கு வந்ததாகச் சொல்லிக் கொண் டிருக்கிறாயாமே! இனிமேல் அந்த மாதிரி என் பெயரை யாரிடமாவது சொல் லிக் கொண்டிருந்தாயானால் என் ரிவால்வரால் உன்னைக் கொலை செய்து விடுவேன். ஆமாம்! சுத்த நான்சென்ஸ்! இனிமேல் நீ எப்படி முன் னுக்கு வந்தாய் என்று யாராவது கேட்டால் என்னுடைய சொந்த முயற்சியால்தான் என்று சொல்ல வேண்டும்! தெரிந்ததா! உன்னால் மதராஸிகளின் பெயரே எடுபட்டுப் போகிறது!'' என்று கூறி விட்டுப் பதிலைக்கூட எதிர்பார்க்காமல் 'விர்' என்று நடந்தான். அந்தப் பெட்டிக் கடைக் காரனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. "இப்படி யும் ஒரு மனிதரா!'' என்று வியந்தான் அவன்.

பெட்டிக்கடை பெரிய 'ஷாப்'பாக மாறியது வேணுவின் வடக்கத்தி நண்பர்கள் இதைப் பற்றி அவனிடம் பிரஸ்தாபித்தபோது, "பார்த்தீர்களா! மதராஸி என்றால் புத்திசாலி என்று பொருள்!'' என்று பெருமையடித்துக் கொண்டான். இதற் கிடையில் நான்கு ஆண்டுகள் ஓடி ஒளிந்தன. வேணு காஷ்மீருக்கு மாற்றப் பட்டிருந்தான். அங்கிருந்து மலேயாவுக்குச் சென்றான். பெட்டிக் கடை முதலாளி மாஜி பிச்சைக்காரனின் வாழ்க்கை பற்பல விதமாக மாறுதலடைந்து உயர்ந்து கொண்டே வந்தது. அதைப்பற்றி வேணு கவலைப் படவில்லை. ஏன்! அவனைப் பற்றி நினைக்கக்கூட இல்லை! நினைக்க அவனுக்கு நேரம் ஏது! ஒரு தடவை அவன் மலேயாவிலிருந்து லீவில் தன் சொந்த ஊருக்கு வந்திருந்தான். அப்போதுதான்






மனைவி:—இதோ பாருங்கள். கையில்லாத ரவிக்கையும், தலைப்பில்லாத புடவையும் கட்டிக் கொண்டிருக்கிறேன்.

புருஷன்:—இதோ பார்! அதை விடப் பெரிய அதிசயம் இருக்கிறது. பணமில்லாத பையோடு சட்டை போட்டுக் கொண்டிருக்கிறேன்.

---

அவனுக்கு அந்த ஏழரை நாட்டுச் சனியன் பிடிக்க ஆரம்பித்திருந்தது. அந்தச் சனி பகவான் கல்யாணி என்ற அந்த அழகியின் முகத்துக்குள்ளே புகுந்து அவனுடைய மோகனப் புன்னகையின் வழியாக வேணுவைப் பார்த்து முறுவலித்தார். வேணு சொக்கிப் போனான். அவளை அடைவதை விட இந்தப் பூலோகத்தில் தான் அடையக் கூடிய மேலான பொருள் வேறெதுவுமே கிடையாது என்ற முடிவுக்கு வந்தான். கல்யாணியின் முக தரிசனத்துக்காக ஆற்றங் கரையிலும் கோயிலிலும் காத்து நின்ற நேரங்களில் நாட்கள் பறந்து விழுந்து ஓடிக் கொண்டிருந்ததை அவன் எண்ணிப் பார்க்கவே இல்லை.

அக்டோபர் பிறந்து மூன்று தேதி ஆகிவிட்டது. ஏழாம்தேதிக்குள் அவன் 'டியூடி'யில் இருக்க வேண்டும். ஆறாம் தேதியன்று வேண்டா வெறுப்பாக ஊரை விட்டுப் புறப்பட்டான் வேணு. பதினான்காம் தேதியன்று அதாவது 'ஆர்டரி'ல் குறிப்பிட்டிருந்த நாளுக்கு ஏழு நாட்களுக்குப் பிறகு ஆஜரான வேணுவுக்குக் கடுமையான தண்டனை கிடைத்தது. சிறைக் கம்பிகளுக்கு இடையில் அவன் கல்யாணியின் முகத்தைப் பார்த்தான். கண்ணீரும் கம்பலையுமாகத் தோன்றிய அவள் முகம் தன்னைக் கெஞ்சி அழைப்பது போல் அவனுக்குத் தோன்றியது. பாவம், வேணு தன் மனவெழுச்சியை மறைத்துக் கொள்ள வகை அறியாது திண்டாடினான். அவன் உள்ளம் எரிமலையைப் போல வெடித்துச் சிதறிக் கொண்டிருந்தது.

ஒரு நாள் 'காம்ப்' 'பரேடில்' வேணுவைக் காணோம். நான்கு நாட்கள் அவனைப் பற்றிய எந்த விதமான தகவலும் கிடைக்கவில்லை. ஆபீஸர்களுக்குக் கடுங்கோபம் வந்தது. எங்கிருந்தாலும் அவனைப் பிடித்து வரும்படி உத்தரவிட்டனர். மலேயா பூராவும் சல்லடை போட்டுச் சலித்தும் ஆள் அகப்படவில்லை. மலேயாவில் அவன் இருந்தால்தானே அகப்படுவான்! அவன் தான் தென்னிந்தியாவின் ஒரு மூலைக்கு ஓடி வந்து விட்டானே! தென்னார்காடு ஜில்லாவில் உள்ள தன் சொந்தக் கிராமத்துக்கு எந்தக் கல்யாணியை நினைத்துக் கொண்டு வந்தானோ, அந்தக் கல்யாணி அங்கே இருந்த சுவடே தெரியவில்லை. அவள் கல்யாணமாகிப் புக்ககம் போய் விட்டாள்.

அப்புறம்தான் வேணு ஒருவாறு தன் நிலைமையைச் சிந்தித்துப் பார்த்தான். அவன் உடம்பு நடுங்கியது. நிர்க்கதியான நிலையில் தன்னை அரசாங்கம் கைது செய்து சுட்டுத் தள்ளுவதைப் போன்ற உணர்வு ஏற்பட்டது. ரோமங்கள் சிலிர்த்தன. இனி தன்னால் இந்த உலகத்தில் பயமில்லாமல் உலாவ முடியாது. தன் சொந்தப் பெயரில் வாழ முடியாது. தன் உருவத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் நினைத்தபோது அவனுக்குப் பகீரென்றது.

தாடியும் மீசையும் முகத்தை மறைத்துக் கோரம் செய்ய,, உருவமே வேறுபட்ட அவன் உள்ளமும் மாறியது. அவன் ஒரு பரதேசியானான். பொன் விளைந்த தமிழ்நாடென்று தன் நண்பர்களிடம் அவன் பெருமையாகப் பீற்றிக் கொண்ட தமிழ் நாட்டிலே அவன், தான் இன்னான் என்று சொல்லிக் கொள்ள நடுங்கி ஒளிந்து ஒளிந்து வாழ்ந்தான். எந்தத் தமிழ்நாடு வந்தவருக்கெல்லாம் இல்லை என்னாது வழங்கும் என்று போற்றிப் புகழ்ந்தானோ, அந்தத் தமிழ் நாட்டிலே ஊர் பேரில்லாத ஒரு பரதேசியாகத் தலை குனிந்து நடந்தான். வேணு நல்ல நிலையில் இருந்தவன். பெரும் போக்கான வாழ்க்கையை நடத்தி வந்தவன் அல்லவா! ஆகவே அவனால் ஒருவரிடத்திலும் கை நீட்டிப் பிச்சை கேட்க முடியவில்லை.

தாடிச் சாமியார் கதையைக் கொஞ்சம் நிறுத்தினார். பிறகு, "ஆரம்பத்தில் சொன்னேனே, அரசன் ஆண்டியாகிறான். ஆண்டி அரசனாகிறான் என்று. ஆனால் அரசன் ஆண்டியாவதற்கும், ஆண்டி அரசனாவதற்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு. அரசன் ஆண்டியானால் யாசிக்கக் கூசுவான். பிச்சை எடுக்க வெட்கப்படுவான். அதே மாதிரித்தான் வேணுவும் கஷ்டப்பட்டான்.

ஒரு நாள் மாலை அவன் பசியினால் சோர்ந்து மவுண்ட் ரோடுக்கு அருகிலிருந்த ஒரு 'ஹோட்டலில்' ஏறி முதலாளியிடம் சென்று கண்ணீருடன் வாய் திறவாது நின்றான். முதலாளி தன் குனிந்த தலையை நிமிர்த்தி வேணுவைப் பார்த்தார். அவ்வளவுதான்! வேணு சப்த நாடியும் ஒடுங்கியவனாய்ச் சட்டென்று திரும்பி வெளியே பரக்கப் பரக்க நடந்தான். முதலாளி திகைத்தார். உடனே கடைப் பையனைக் கூப்பிட்டு சில இட்டிலிகளையாவது அந்த ஏழைப் பரதேசியிடம் கொடுக்கும்படி உத்தரவிட்டார். தயாள குணம் படைத்த வேணுவினால் கைதூக்கி விடப்பட்ட அவருக்கு வேணுவின் ஞாபகார்த்தமாகப் பரந்து விசாலித்திருந்த உள்ளம் சொன்ன உத்தரவு அது. ஆனால் வாழ்க்கை இழிந்து ஆதரவற்றுப் போன வேணுவுக்குத் தன் பரதேசிக் கோலத்துடன் பணக்காரனாய்ப் போய்விட்ட அந்த மாஜி பிச்சைக்காரனை நேருக்கு நேர் பார்க்கக் கூடத் தைரியமில்லை. அங்கே கொடுக்கப்பட்ட இட்டிலியுடன் அவன் எங்கெங்கோ சுற்றி விட்டுக் கடைசியாக இங்கு வந்து சேர்ந்தான்!"

கடைசியாகச் சாமியார் சொன்ன இந்த வார்த்தையைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'அப்படியா! அரசாங்கம் தேடிக் கொண்டிருக்கும் இவனைப் பிடித்துக் கொடுத்தால் சர்க்கார் ஏதாவது பணம் தருவார்களே!' என்ற ஆசை எழுந்தது. ஆனால் அதற்குள்ளாக தூரத்தில் இரண்டு ராணுவ அதிகாரிகள் அவனைக் கையைப் பிடித்து இழுத்துச் செல்வது தெரிந்தது. என் ஆசை நிராசையாய் விட்டதைக் கண்ட நான் மறுபடியும் சத்திரத்தில் காலை நீட்டிப் படுத்துத் தூங்க முயன்றேன்.



அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"I use OATINE CREAM and OATINE SNOW regularly to preserve my complexion and ensure freshness. I find OATINE delightful and I recommend it to all my friends."*

Sunanda Devi






# பாதி விலை

சமீபத்தில் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து ஏராளமான கடிகார சரக்குகளை வரவழைத்து அவைகளை பாதி விலைக்கு குறைவாக வழங்குகிறோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம். ஒவ்வொரு கடிகாரமும் 3 வருஷ உத்திரவாதம் கொண்டவை. ஒவ்வொரு கடிகாரத்துடனும், ஒரு காரண்டி சர்டிபிகேட்டும், ஒரு நேர்த்தியான ஸ்ட்ராப், ஒரு வெல்வெட் பெட்டியும் இனாமாகக் கொடுக்கப்படும். பாக்கிங், தபால் செலவு இலவசம்.

## இலவசம்

புது வருஷ காலண்டரும், மடக்கக் கூடிய சீப்பும் இணைக்கப்பட்ட தையல் இல்லாத அமெரிக்கன் பிளாஸ்டிக் மணிபர்ஸ் ஒன்றும் ஒவ்வொரு கடிகாரத்துடனும் இலவசமாக அனுப்பப்படும்

குறைந்த விலைகளின் விவரம் கீழ்கண்டவாறு:



வாட்டர் ப்ரூப், ரேடியம் சைஸ் 10½

நெ. ரூ.
1 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 49/-
2 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 51/-



சிறிய ரவுண்டு சைஸ் 9½

நெ. ரூ.
3 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
4 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



சென்டர் செகண்ட் சைஸ் 9½

5 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
6 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



வளைவு சைஸ் 7½

7 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
8 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



டன்னோ சைஸ் 6½

9 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
10 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



லேடீஸ் சைஸ் 5¼

11 ரோ.கோ. ஸ்டீல்பேக், லிங்க் ஸ்ட்ராப், பேன்ஸி டயல் 15 ஜுவல்ஸ் 50/-

PEARL WATCH CO., P. B. No. 6514, BOMBAY - 26




## 4. தியேட்டர் தகராறு!

அன்று ஒரு நாள் இரவு நானும் ஸ்டெலாவும் ஒரு நாடகம் பார்க்கப் போயிருந்தோம். திடீரென்று நாடகக் கொட்டகையில் கூடியிருந்த கூட்டத்தின் ஒரு பகுதியில் குழப்பம் ஏற்பட்டது. 'உஸ்! உட்காரு! பேசாதே! ஆர்டர்! ஆர்டர்!' என்று பல திசைகளிலிருந்தும் கூச்சல் எழுந்தது. ஆனால் அதற்கு ஒன்றும் பலன் ஏற்படவில்லை. குழப்பம் அதிகரித்துக் கொண்டேதான் போயிற்று.

நாடகம் பார்ப்பதற்காகச் சில இந்திய மாணவர்களும் வந்திருந்தார்கள். அவர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையே ஏதோ சச்சரவு ஏற்பட்டு அது முற்றியது. அதற்குள் யாரோ, "இந்த இந்தியப் பன்றிகளை அடித்து நொறுக்குங்களடா!" என்றான். அதைக் கேட்டதுதான் தாமதம்; நான் என் நிலை மறந்தேன். என்னை இனம் தெரியாத ஒரு வெறி ஆட்கொண்டது. ஏன், எப்படி என்றெல்லாம் கேட்டால் என்னால் சொல்ல முடியாது. அந்த வெறியின் வேகத்தில் நான் சண்டை நடந்து கொண்டிருந்த இடத்துக்கு ஒரே ஓட்டமாக ஓடினேன். அங்கே ஆங்கிலேயர்கள் இந்திய மாணவர்களை அடித்துக் கொண்டிருந்தார்கள். என் நரம்புகளில் முறுக்கு ஏறியது. அந்தச் சமயம் என் கைகளில் எங்கிருந்துதான் அவ்வளவு பலம் வந்ததோ, தெரியாது. நான் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு, உள்ளே சென்று இந்திய மாணவர்களின் சார்பில் சண்டை போடலானேன். பின் வாங்கிக் கொண்டிருந்த இந்திய மாணவர்கள், அவர்கள் சார்பில் நான் சண்டையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டதும், பின் வாங்குவதை நிறுத்தி விட்டு உணர்ச்சி பெற்றுச் சீறியெழுந்து முன்னைக் காட்டிலும் பன்மடங்கு ஆத்திரத்துடன் மறுபடியும் ஆங்கிலேயர்களைத் தாக்கத்தொடங்கி விட்டார்கள். நான் அவர்களை உற்சாகப் படுத்திச் சண்டையிடச் செய்து கொண்டிருந்தேன். இதற்குள் என் தலையில் யாரோ ஓங்கித் தடியினால் அடிக்கவே, நான் மூளை சிதறி மயங்கிக் கீழே சாய்ந்து விட்டேன்.

எனக்குப் பிரக்ஞை வந்தபொழுது, நான் ஆஸ்பத்திரியில் இருப்பதை உணர்ந்தேன். எனக்கு ஏற்பட்ட காயம் ஒன்றும் அவ்வளவு பிரமாதமானதில்லை; சாதாரணமானதுதான். இரண்டு மூன்று நாட்களுக்குள்ளேயே நான் குணம் அடைந்து விட்டேன். நான் குணம் அடைந்து வெளியே வந்ததும் வராததுமாக அடிதடி வழக்கு ஆரம்பமாகி விட்டது. என் வாக்கு மூலம் நியாயஸ்தலத்தில் பெரிய பரபரப்பை உண்டு பண்ணியது. என்னைப் போன்ற மனிதன் இந்தியனாக இருப்பான் என்று யார் அங்கே எதிர்பார்த்திருக்கப் போகிறார்கள்? என் உருவத்தைப் பார்த்து யாரும் ஆங்கிலேயன் என்று எண்ணியிருப்பார்களே ஒழிய, நான் இந்தியனாக இருக்கக் கூடும் என்று கனவில் கூடக் கற்பனை செய்திருக்க நியாயம் இல்லை அல்லவா? ஆகவே, ஜனங்கள் என் வாக்கு மூலத்தைக் கேட்டதும் 'கசமுச' வென்று என்னைப் பற்றிப் பேசிக் கொள்ளலாயினர். இந்திய மாணவர்கள் என்னைத் தங்கள் இஷ்ட தெய்வ

மாகவே என்னைப் பரிவுடன் பார்க்கலாயினர். ஆனால் இதனால் எல்லாம் எனக்கு ஒன்றும் ஆச்சரியம் ஏற்படவில்லை. ஆனால் ஸ்டெலா என் சார்பில் சாட்சியம் கொடுக்க மறுக்கவே, எனக்கு ஏற்பட்ட வியப்பையும் அதிர்ச்சியையும் சொல்லி முடியாது. ஏனெனில் அது வியப்பையும் அதிர்ச்சியையும் அளிக்கக் கூடிய விஷயம்தானே? எந்தப் பெண்ணை நான் என் உயிருக்கு உயிராக எண்ணி வந்தேனோ, எவளுக்காக என் வியாபாரத்தையே கவனிக்காமல் வீணாக்கிக் கொண்டேனோ, எவளுடைய காதலிலும் அழகிலும் மயங்கி என் ஜீவனோபாயத்தின் மார்க்கத்தையே கெடுத்துக் குட்டிச் சுவராக்கிக் கொண்டேனோ, எவளுடைய மோகத்தில் மயங்கி என் வாழ்க்கையையும் அதன் வருங்காலத்தையும் விழலாக்கிக் கொண்டேனோ, அவள் எனக்காக இரண்டு வார்த்தைகள் சொல்லக் கூட மறுத்து விட்டாள் என்றால் எனக்கு எப்படி இருந்திருக்கும்? நீயே சிந்தித்துப் பார்! நான் எழுப்பியிருந்த மணல் சுவர் சரிந்து மண்ணோடு மண்ணாகிவிட்டது.

அப்பொழுது அவன் வியாயஸ்தலத்தில் தான் இருந்தான். அவன்



என்னைப் பார்த்த பார்வை இருக்கிறதே, அதை என்னவென்று சொல்லுவது? அவள் தன்னை ஏதோ ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த அப்ஸரஸ் போலவும் என்னைப் பூமியிலே நெளியும் புழுப்போலவும் எண்ணி என்னை வெகு அலட்சியமாகப் பார்த்தாள். அதைக் கண்ணுற்ற நான் ஸ்தம்பித்துப் போய் வாய்திறந்து பேச வழி தோன்றாமல் திகைத்தேன். அப்பொழுது அவள் விழிகளிலே கர்வம் கொப்புளித்துக் கொண்டிருந்தது. கர்வம் தாண்டவமாடும் அவளுடைய அந்த விழிகளில் முன்பு அவள் காட்டி வந்த பழைய காதலும் அன்பும் லவலேசம்கூட இருப்பதாகத் தோன்றவில்லை. அதைக் கண்ணுற்ற என் மனம் மிகவும் புழுங்கியது.

வழக்கின் தீர்ப்பைக் கேட்டுக் கூடியிருந்த மக்கள் அனைவரும் வியப்பெய்தினர். எனக்குப் பத்து நாட்கள் சிறைத் தண்டனை கிடைத்தது. செய்தித் தாள்கள் சிறிதைப் பெரிது படுத்தி எழுதித் தள்ளின. ஆனால் நான் அவற்றையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தவில்லை. சிறையிலிருந்து வெளிவந்ததும் இந்திய மாணவர்கள் எனக்காக ஊர்வலம் விட்டனர். பெரிய கூட்டங்கள் கூட்டி உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தனர். அதுமட்டும் அல்ல; எனக்காக ஒரு பணமுடிப்பே கூடச் சேர்த்து வழங்கினார்கள்.

அந்த உபசாரங்களையும் உபசாரப் பத்திரங்களையும் கண்ட எனக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. நான் மகிழ்ச்சியுற்று வானவீதியிலேயே மிதக்கலானேன். 'இந்தியனாகப் பிறந்த நாம் எத்தனை பாக்கியசாலி! எத்தனையோ வருஷங்களாக நாம் ஆங்கிலேயனாக இருந்திருக்கிறோமே, யாராவது நம்மைப் பொருட்படுத்தினார்களா? ஒரு நாள் இந்தியனாக ஆகிவிட்டதற்காக நமக்கு எவ்வளவு உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தார்கள்! நல்லவேளையாக, நாம் இந்தியனாகவே பிறந்தோமே, அது நம் பாக்கியம்தான்!" என்று எண்ணிப் பூரித்துப் போனேன்.

ஆனால் எனக்கு மிகுந்த மனக்கிலேசத்தையும் மன வருத்தத்தையும் அளித்த விஷயம் ஸ்டெலா அன்று வியாய ஸ்தலத்தில் நடந்து கொண்ட முறைதான். எவளுக்காக நான் என்னுடைய சகலத்தையும் துறந்து விட்டேனோ, அவள் அப்படி நன்றி கெட்டவளாக, இருதயமே அற்றவளாக மாறிவிடுவாள் என்று நான் — அவளுக்காக அனைத்தையும் அர்ப்பணம் செய்துவிட்ட நான் — குறைந்த பட்சம் கருதி யிருக்க முடியாதல்




லவா? ஆபத்துக் காலத்தில் சரியான சமயம் பார்த்து அவன் இப்படி என் காலை வாரி விட்டுவிடுவான் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. ஆகவே, அவனுடைய அந்தச் செய்கை என் மனத்தை அரம் கொண்டு அறுத்தது. அன்றைய நிகழ்ச்சிக்குப் பிறகு எனக்கு என் இந்தியத் தன்மையின்மீது அபிமானமும் அன்பும் ஏற்படலாயிற்று.

அன்று மாலை டேய்லி ஹெரால்டு பத்திரிகையின் நிருபர் என்னைப் பேட்டி காண வந்த பொழுது, நான் மிகுந்த கர்வத்துடன் தலை நிமிர்ந்து, "ஆம். நான் இந்தியன்தான். இந்தியனாகப் பிறந்ததற்காக நான் எல்லையற்ற பெருமையும் கொள்கிறேன். என்னை வேறு தேசத்தவனாகச் சிருஷ்டிக்காததற்காகக் கடவுளை நான் வாழ்த்தி வணங்கவும் செய்கிறேன்" என்றேன்.

"ஆங்கிலேயருடைய நியாய ஸ்தலங்களைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார் நிருபர்.

"நான் என் ஜாதியை வெளியிடாமல் மறைத்திருந்தால் தீர்ப்பு வேறாக, அதாவது நேர்மாறாக இருந்திருக்கும் என்பதுதான் என் அபிப்பிராயம். எனக்கு இந்தத் தண்டனையினால் கிடைத்த இன்பம், விடுபட்டிருந்தால் கட்டாயம் கிடைத்திராது. குற்றம் முழுவதும் ஆங்கிலேயர் கோஷ்டியைச் சேர்ந்தது தான். இந்தியர்கள் மீது சிறிதும் குற்றமில்லை" என்று பதில் அளித்தேன் நான்.

"தாங்கள் இந்தச் சண்டையில் ஏன் பங்கெடுத்துக் கொண்டீர்கள்?"

"என்னால் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. இது இயல்புதானே?"

"இயல்பா? அது எப்படி?"

"என் இரத்தம் கொதித்தது. ஏனெனில் என் இருதயத்தில் ஓடுவது இந்திய ரத்தம் அல்லவா?"

"அப்படியானால் நீங்கள் கூட்டத்தைத் தாக்கினீர்களா?"

"இல்லை. நான் சண்டையை விலக்கத் தான் முயன்றேன். கூட்டம்தான் என்னைத் தாக்கியது. அதன் பலனாக நான் காயமுற்றேன். கூடியிருந்தவர்கள் அனைவரும், நியாயத்தை ஒரு மூலையில் மூட்டை கட்டி வைத்து விட்டு எனக்கு வேண்டுமென்றே தண்டனை அளிக்கப்பட்டது என்பதையும் ஜாதி அபிமானம் தலை தூக்கியதன் காரணமாகத் தங்கள் ஜாதியினரை ஆதரிக்கும் பொருட்டு நீதி




கேசவர்த்தினி அணா 14.. ஷாம்பு அணா 14. தபால் செலவு வேறு: எங்கும் கிடைக்கும்

**தென் இந்திய ரஸாயனசாலை, கோயமுத்தூர்**

---

# பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ்

## கம்பெனி லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிதம்: 1933)

தலைமை ஆபீஸ்: **மதுரை**

சிறந்த சேவை செய்து வருகிறது

நெருப்பு, கப்பல், மோட்டார், விபத்து

முதலிய சகலவித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள்

மொத்த ஆஸ்திகள் — ரூ. 87,00,000

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, நாகபுரி, சென்னை
திருவனந்தபுரம், கோயம்புத்தூர்.

பதிகள் நியாயத்தைமீறி எனக்குத் தண்டனை அளித்தார்கள் என்பதையும் கட்டாயம் ஒப்புக் கொள்ளுவார்கள். நான் மட்டும் ஆங்கிலேயனாக இருந்தால் எனக்குக் கட்டாயம் இந்தத் தண்டனை கிடைத்திராது. அதற்கு மாறாக எனக்கு வெகுமதி அளித்திருப்பார்கள், புகழ் மாலை சூட்டியிருப்பார்கள்; என்னைப் பிரசங்கங்கள் புரிய அழைத்திருப்பார்கள். ஆனால் நானோ இந்தியன். இந்தியர்களை ஆதரித்தேன். ஆகவே தண்டனை கிடைத்தது. எனக்கு நியாயஸ்தலம் தண்டனை அளிக்காமல் இருந்திருந்தால் நியாயஸ்தலத்தின் பெயரும் பெருமையும் எவ்வளவோ உயர்ந்திருக்கும் என்பதுதான் என் அபிப்பிராயம்" என்றேன்.

நிருபர் என்னைப் பேட்டி கண்ட இந்த விவரம் பல மாதங்கள் வரை பத்திரிகைகளில் பத்தி பத்தியாக அடிபட்டது.

## 5. பணம் வந்தது!

சகோதரா! என் கடை கடன் தொல்லைகளுக்கு இலக்காகி மூழ்கிவிட்டது. ஆனால் அதற்காக நான் பட்டினி கிடந்து மடியும்படியான அவசியம் நல்ல காலமாக நேரவில்லை. என் நண்பர் குழாம் விஸ்தாரமானதாயிருந்தது. நான் அவர்களுக்கெதிரே பணத்தைப் பணமாக நினைத்ததில்லை. அவர்களுக்காக நான் பணத்தை ஏராளமாக் வாரி வீசியிருக்கிறேன்; தாராளமாகச் செலவிட்டிருக்கிறேன். அந்தத் தாராளம் இந்தச் சங்கடமான நிலைமையில் எனக்கு வெகுவாக உதவி புரிந்தது. எந்த நண்பனிடம் சென்று நான் என்ன வேண்டுமென்று கேட்டாலும் இல்லையென்று சொல்லாது உடனே கொடுத்து உதவி புரிந்து வந்தான். இம்மாதிரி நண்பர்களின் உதவியைக் கொண்டு எத்தனையோ மாதங்கள் சிரமமின்றி ஓடிவிட்டன. ஆனால் எவ்வளவு நாட்கள்தான் நண்பர்கள் உதவி புரிந்து கொண்டிருப்பார்கள்? சிறுகச் சிறுக என் நண்பர்கள் என்னைக் கண்டால் முகத்தைத் திருப்பிக் கொள்ள ஆரம்பித்தார்கள். எங்கேயாவது என்னை வழியில் காண நேர்ந்து விட்டால், கண்டும் காணாதது போல் கத்தரித்துக் கொண்டு போகத் தொடங்கினார்கள். நான் அவர்களைப் பார்த்துக் கைதட்டிக் கூப்பிட்டால் காதில் விழாதது போலப் போய்விடுவார்கள். இதன் பலனாக நான் இரண்டு மூன்று நாட்கள் முழுப் பட்டினி கிடக்கும்படி நேர்ந்துவிட்டதென்றால் பார்த்துக் கொள்ளேன்!

'யாரிடமாவது கை நீட்டி ஏதாவது வாங்கினால் என்ன?' என்ற எண்ணம் கூட என் உள்ளத்தில் எழும். பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்று சொல்வார்களே, அது உண்மையாகவேதான் தோன்றியது. ஆயினும் என் தன்மான உணர்ச்சி என்னைப் பிறர்முன் கை நீட்ட விடவில்லை. ஆகவே, யாரிடமும் கை நீட்டி எதுவும் கேட்பதில்லை என்று மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டேன். ஐசுவரியம் அழிந்து விட்டது. ஆயினும் அதன் மிடுக்குக் குறையவில்லை. பெருங்காயம் வைத்த பாண்டத்தில் பெருங்காயம் தீர்ந்து விட்டாலும் அதன் வாசனை இருக்கும் அல்லவா? கயிறு எரிந்து விட்டாலும் அதன் முறுக்குப் பிரிவதில்லை அல்லவா? அது போலக் காசு குறைந்து விட்டாலும் கண்ணியத்தைக் குறைத்துக் கொள்ள நான் மனம் ஒப்பவில்லை. இது யாருக்கும் இயல்புதானே? நான் இந்தியாவுக்குக் 'கடல்த் தந்தி' கொடுத்தேன். என் இந்திய நிலபுலன்களைக் கவனித்து வந்த குமாஸ்தாவுக்குப் பணம் அனுப்பி வைக்குமாறு அதில் குறிப்பிட்டிருந்தேன். அப்பொழுது அந்தப் பணத்தைத்தான் நான் நம்பி எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தேன்.

நடுப்பகல் நேரம். நான் என் அறைக்கு வெளியே நின்ற வண்ணம் 'இன்றையப் பொழுதை எப்படி ஓட்டுவது?' என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது தெருவில் தபால்காரன் வீடு வீடாகக் கடிதத்தைக் கொடுத்துக் கொண்டே வந்து கொண்டிருந்தான். அவன் தலையைக் கண்டதும் என் உள்ளம் பட படவென்று அடித்துக் கொண்டது. 'நமக்கும் ஏதாவது மணி ஆர்டர் வந்திருக்கலாமோ? மணி ஆர்டர் இல்லாவிட்டாலும் இன்ஷியூரன்ஸ், ரிஜிஸ்தர், தபால் என்று ஏதாவது ஒன்று வந்திருக்கக்கூடாதா?' என்று எண்ணினேன். அந்த எண்ணமே என் உடலைப் புல்லரிக்கச் செய்தது. இளவேனிற் காலத்தின் இளந்தென்றல் வீசத் தொடங்கியதும் பூங்காவில் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கத் தொடங்குகின்றன அல்லவா? அதே போல என் உள்ளப் பூங்காவிலே மகிழ்ச்சி மலர்கள் மலரத் தொடங்கின.

ஆனால் அடுத்த நிமிஷமே வேறு ஒரு எண்ணம் என் உள்ளத்தை ஆட்கொள்ளத் தொடங்கியது. அந்த எண்ணம் என் உள்ளத்திலே அவநம்பிக்கையையும் ஏமாற்றத்தையும் விதைத்துச் சென்றது. கடுங்கோடையின் வெக்கைக் காற்று வீசத் தொடங்கிவிட்டால், மலர்கள் வாடி வதங்கிப் போய் விடுவதில்லையா? அதேபோல என் மகிழ்ச்சி மலர்கள் வாடி வதங்கி விழத் தொடங்கின. என் இருதயத்திலே இப்படி எண்ண மாறுபாடுகள் ஏற்பட்டுக் கொண்டிருந்த போதிலும் என்னெதிரே நம்பிக்கை கைகட்டிக் கொண்டு நின்றது.

தபால்காரன் என்னருகே வந்து, என்னிடம் ஒரு தபாலைக் கொடுத்து விட்டுச் சென்றான். கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்துக்கும் மகிழ்ச்சிக்கும் ஓர் எல்லையில்லை. அந்தக் கடிதம் மூல்தானில் உள்ள என்னுடைய குமாஸ்தா



"ரெயில் புறப்பட இன்னும் பத்தே நிமிஷம்தான் இருக்கிறது. பெட்டி படுக்கைகளைப் பார்த்துக் கொள்ள வேண்டும்; டிக்கட்டு வேறு வாங்கி வரவேண்டும்; அப்புறம் சாப்பிட வேண்டும். இதற்கெல்லாம் நேரம் இராது போலிருக்கிறதே! என்ன செய்வேன். நீங்கள் எனக்கு ஒரு உபகாரம் செய்வீர்களா?"

"ஓ, பேஷாகச் செய்கிறேன். உங்களுக்காக உங்கள் சாப்பாட்டை வேண்டுமானால் சாப்பிட்டு விடுகிறேன்......"

---

எனக்கு எழுதியிருந்ததுதான். எட்டு நாட்களுக்கு முன்பாகத் தங்கள் கணக்கில் எண்ணூறு பவுன் ஈஸ்டர்ன் பாங்குக்கு அனுப்பியிருக்கிறோம் என்று அவன் அதில் குறிப்பிட்டிருந்தான். அந்தச் செய்தியைப் படித்த நான் 'டர்பி லாட்டரி'யில் முதல் பரிசு வாங்கி விட்டவன் போல மனம் மகிழ்ந்தேன். அகத்தில் ஏற்பட்ட அந்த மகிழ்ச்சியை முகத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சி எடுத்துக் காட்டுவது இயல்பே அல்லவா? அப்பொழுது அவ்வழியே ஒரு டாக்ஸி போய்க்கொண்டிருந்தது. நான் சட்டென்று ஒரே தாவாகத் தாவி அதில் ஏறி உட்கார்ந்து, "ஈஸ்டர்ன் பாங்குக்குப் போ!" என்று டிரைவருக்கு உத்தர விட்டேன்.

அங்கே போனதும் நான் பாங்கியிலிருந்து கொஞ்சம் பணத்தை எடுத்துக் கொண்டு, நேரே ஒரு ஹோட்டலை அடைந்தேன். எனக்கோ அகோரப் பசி வயிற்றைக் கிள்ளிக் கொண்டிருந்தது. பனி நிறைந்த பிரதேசத்திலே பசி மிகுந்த ஓநாய்கள் குதிரைகள் மேல் பாயுமே, அது போல நான் உணவுத் தட்டின் மீது பாய்ந்தேன். உணவை முடித்துக் கொண்டு வெளியே வந்த பொழுது மீண்டும் அதே கர்வம் என் உள்ளத்தில் தலை தூக்கியது. முகத்தில் மறுபடியும் அதே கவலையின்மை தாண்டவமாடத் தொடங்கியது. இப்படி மகிழ்ச்சியும் மிடுக்கும் தாண்டவமாட நான் ஹோட்டலிலிருந்து இறங்கியபொழுது, எதிரே ஸ்டீலா வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஆனால் அவளுடைய நிலைமையில், மலைக்கும் மடுவுக்கும் வானத்துக்கும் புவிக்கும் உள்ள வேறுபாடு காணப்பட்டது. கண்களிலே அந்தப் பழைய ஒளியைக் காணவில்லை. இலையுதிர் காலத்து மரங்களைப் போல் நிறம் வெளிறிப் போயிருந்தது. இந்த அழகி ஒரு காலத்தில் லிவர்பூலில் உள்ள எழிலரசிகளுக்கெல்லாம் எழிலரசியாக விளங்கியவள் என்று அப்பொழுது அவள் இருந்த நிலையைப் பார்த்து யாராலும் சொல்ல முடியாது. அந்தக் காட்சி என் உள்ளத்தைக் கசக்கிப் பிழிந்தது. என் கண்களில் நீரை வருவித்தது. நான் மேல்நாட்டு நாகரிகத்தை ஒரு புறமாக மூட்டை கட்டி வைத்துவிட்டு அவளை நெருங்கி, "ஏன்? உனக்கு என்ன ஏற்பட்டு விட்டது?" என்று கேட்டேன்.

ஸ்டீலா என்னை நிமிர்ந்து பார்த்தாள். ஆனால் அவளுடைய கண்களில் அந்தப் பழைய லாவண்யம், ஒளி, கவர்ச்சி ஒன்றும் இல்லை. எங்கள் இருவர் கண்களும் கலந்தன. ஆனால், அந்தப் பழைய உணர்ச்சி அவளிடம் லவலேசங் கூட இல்லை. ஒன்றில் கர்வம் தலைதூக்கி நின்றது. இன்னொன்றில் நாம் இவ்வளவு தாழ்ந்து விட்டோமே என்ற தாழ்வு மனப்பான்மையும் தார்மிக வீழ்ச்சியும் உறைந்திருந்தன. ஸ்டீலாவின் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரத் தயங்கித் தடுமாறின. "கடவுளுக்காக எனக்கு உதவி செய்" என்று தடுமாற்றத்துடன் எப்படியோ வாக்கியத்தைப் பூர்த்தி செய்து விட்டு அவள் அழத் தொடங்கி விட்டாள்.

"ஏன் அழுகிறாய், ஸ்டீலா? விஷயம் என்னவென்று சொல்லு. என்னால் இயன்ற உதவியைச் செய்கிறேன்!" என்றேன். அவள் பதிலே பேசவில்லை.

அவளை அதிகமாகத் தொந்தரவு செய்து விஷயத்தை வருவிப்பது அவ்வளவு உசிதமாக எனக்குத் தோன்றவில்லை. ஏழைமையைக் காட்டிலும் ஏழைமையை வெளிக் காட்டிக் கொள்வது இருக்கிறதே, அதுதான் மிகவும் வருந்தத்தக்க விஷயம். மனிதன் ஏழைமையைக் கண்டு அவ்வளவு அஞ்சுவதில்லை. ஆனால் ஏழைமையைத் தைரியத்துடன் வெளிக் காட்டிக் கொள்ள நேரும்பொழுது தான் அவனுடைய இருதயமே இரண்டு துண்டாகி விடுகிறது.

அவள் நிலைமையை ஒருவாறு ஊகித்து உணர்ந்த நான் என் செக் புஸ்தகத்தை எடுத்து எட்டுப் பவுனுக்கு ஒரு செக் எழுதி அவள் கையில் கொடுத்தேன்.

ஒரு வேளை ஸ்டீலா என்னிடம் இதை எதிர் பார்க்கவே இல்லையோ, என்னவோ? குற்றம் செய்துவிட்ட பாலகன் பயபீதியுடன் தனக்கு உபகாரம் செய்தவர்களைப் பார்ப்பானே, அதுபோல என்னைப் பார்த்து விட்டு மெதுவாக அகன்றாள். (தொடரும்)

குழந்தையும் நானும் வற்புறுத்திக் கேட்பது

## கால்கேட் பேபி பௌடர்

கால்கேட் போரேடெட் பேபி பௌடரை உபயோகித்த பிறகு நீங்களும் இதையே கூறுவீர்கள். இப்பௌடரில் மிகவும் நேர்த்தியான டால்க், போரிக் ஆஸிட் அடங்கியிருக்கின்றன. குழந்தையின் மென்மையான சருமத்திற்கு உற்சாகத்தையும், சுகத்தையும் கொடுத்து எரிச்சலையும், வேர்க்குருவையும் வரவொட்டாமல் தடுக்கிறது.




ஓர் கால்கேட்
உயர்ந்த ரகச் சரக்கு!

## தி பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

தந்தி: EVERMANS] (இந்தியாவில் இணைக்கப்பட்டது) [போன்: 85534

நெ. 3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5

●

எல்லோருக்கும் சௌகரியமான முறையில் ஜூன் மாதத்திய புதிய மாத சீட்டை ஆரம்பிப்பதைக் குறித்து மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்.

சந்தா செலுத்தும் கடைசி தேதி 7-6-52 ★ முதல் ஏலத் தேதி 13-6-52

| | | மாதச் சந்தா | சீட்டின் மதிப்பு |
|---|---|---|---|
| A | கிளாஸ் | ரூ. 200/- | ரூ. 5000/- |
| B | ,, | ரூ. 100/- | ரூ. 2500/- |
| C | ,, | ரூ. 50/- | ரூ. 1250/- |
| D | ,, | ரூ. 25/- | ரூ. 625/- |
| E | ,, | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ,, | ரூ. 15/- | ரூ. 375/- |
| G | ,, | ரூ. 10/- | ரூ. 250/- |

25 மாதங்கள் — 25 மெம்பர்கள்

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்கிகளின் செக் பெற்றுக் கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகையை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். வேண்டுவோருக்கு இலவசமாக விபரங்களும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும். உடனே விண்ணப்பிக்கவும்.........இந்த சந்தர்ப்பத்தைத் தவற விடாதீர்கள்.

(போர்டாரின் உத்திரவுப்படி.)

எம். வி. சுப்ரமணியம்
மானேஜிங் டைரக்டர்.

எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது.




L. 222-50 TM

# நினைத்ததும் நடந்ததும்

டி. வேதாந்தம்

சரோஜா துளிக்கூட கூச்சமோ, வெட்கமோ படவில்லை. ராகவன் சரோஜாவின் கையைப் பிடித்துக் கொண்டு அக்னியை வலம் வரவேண்டியிருந்தபொழுது, ராகவனின் தயக்கத்தைக் கண்டு, சரோஜாவே தன் கையினால் ராகவனின் கரத்தைப் பற்றினாள். அம்மி மிதிக்க சரோஜாவின் பாதத்தை ராகவன் தூக்கக் கீழே குனிந்தபொழுது சரோஜா தானே தன் பாதத்தை லாகவமாய்த் தூக்கி ராகவனின் கரத்தில் வைத்தாள். ராகவன் இதை எதிர்பார்க்கவே இல்லை. 'நாம் நினைத்தது என்ன நடந்தது என்ன! எல்லாம் ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது!' என்று வியந்து கொண்டிருந்தான்.

* * *

சரோஜா ராகவனின் மாமா பெண். ராகவனுக்கு வயது பத்தாகும் பொழுது அவன் தகப்பனார் இறந்து விட்டார். அதிலிருந்து அவனும் அவன் தாயாரும் அவன் மாமா ரகுநாதனால் பராமரிக்கப்பட்டு வந்தார்கள். ரகுநாதன் இரண்டாவது யுத்த ஆரம்பத்தில் பத்திரமாய் ரங்கூனில் இருந்து இந்தியாவுக்கு வந்து குடியேறியவர். ரங்கூனிலிருந்து வந்தவராகையால் அவரைக் கிராமத்தில் இருந்த எல்லோரும் 'ரங்கூன்கார ரகுநாதன்' என்று அழைத்து வந்தார்கள்.

சரோஜா ராகவனைவிட இரண்டு வயதே சிறியவள். இருவரும் அன்யோன்யமாய்ப் பழகி வந்தார்கள். சரோஜாவுக்குத் தலை வலித்தால்கூட ராகவன் பொறுக்க மாட்டான். ராகவன் பத்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தபொழுது சரோஜா ஐந்தாவது பாரம் படித்தாள்.

அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் ராகவனும், சரோஜாவும் இருக்கும் அன்யோன்யத்தைக் கண்டு அவர்களைச் சதி, பதிகளாகவே நினைத்து வந்தார்கள். ரகுநாதனிடம்கூட சிற்சில சமயங்களில் "உங்களுக்கு என்ன ஸார் கவலை. வீட்டிலேயே மாப்பிள்ளை இருக்கிறான்; எங்களைப்போல் ஜாதகக் கட்டுடன் ஊர் ஊராய் அலைய வேண்டியதில்லை" என்று சொல்லுவார்கள். ரகுநாதனோ சிரித்துக் கொண்டே போய் விடுவார். ரகுநாதனுக்கு உள்ளூர தன் மருமானுக்கே சரோஜாவைக் கொடுக்க வேணுமென்ற ஆசை யிருந்தபோதிலும், தன் சம்சாரத்தின் அபிப்பிராயத்திற்கு எதிராய் அப்படிச் செய்வதற்குத் தைரியமில்லாம லிருந்தார்.

தம் மனைவியின் அதிர்ஷ்டத்தினால்தான் தான் இன்று இந்த நிலையில் இருப்பதற்குக் காரணம் என்பது அவரது அபிப்பிராயம். அதனால் அவள் மனோபீஷ்டத்திற்கு மாறாக அவர் இதுவரை நடந்து கொண்டதில்லை. ரங்கூன்காரர் மனைவி மீனாட்சிக்குச் சரோஜாவை ராகவனுக்குக் கொடுப்பதில் துளிக்கூட இஷ்டமில்லை. நில புலம் இல்லாதவன், நிராதரவாய் விடப்பட்டுத் தங்கள் போஷணையில் இருந்து வருபவன். வேலை செய்து ஜீவிக்க வேண்டியவன் என்பதுதான் காரணம்.

ஊராரின் பரிகாசமும், சரோஜாவின் எழிலும் நாள் ஆக ஆக ராகவன் மனத்தில் ஒரு இன்ப வேதனையை உண்டாக்கித் கொடுத்து வந்தது. ஆனால் சரோஜா தன்னைப்பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாள். தான் அனுபவிக்கும் இன்பத்தைப் போல் தன் விஷயத்தில் அவளும் அனுபவிக்கிறாளா! என்பதை அவளிடமிருந்து அறிய எவ்வளவு முயற்சித்தும் அவள் மனோநிலையை ராகவனால் அறிந்துகொள்ள முடியவில்லை.

ராகவனின் தாயாருக்குச் சரோஜாவைத் தன் மருமகளாக அடைய வேண்டுமென்னும் ஆசை அளவுக்கு மீறி யிருந்தது. குழந்தைகள் மாலையும் கழுத்துமாக மணப் பந்தலில் தன்னை வந்து வணங்க வேண்டும் என்பது அவள் ஆசை. ஆனால் மூடவன் கொடுபுத் தேனுக்கு எப்படி ஆசைப் படுவது! "இருக்கிற நிலைமையில் இருந்தால், தன் எண்ணம் கண்டிப்பாய் நிறைவேறும். ஆனால் காலம் தன்னைத் தாழ்த்தி விட்டதே!" என்று பெருமூச்செறிவாள். இருந்தாலும் ஒரு நாள் தன் தம்பியிடம் பேச்சுக் கொடுத்தாள்.

"ஏதோ, யார் பண்ணிய புண்ணியமோ! நீயும் உயிருடன் வந்து எங்களைக் காப்பாற்றி விட்டாய். அவனுக்கும் ஒரு வேலையாகி, சரோஜாவுக்கும் கல்யாணமாகி விட்டால் அப்புறம் நான் நிஷ்கவலையாய் இருப்பேன்."

"நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள், அக்கா! இத்தனை நாள் காப்பாற்றியவன் இனியும் வேண்டியதைச் செய்ய மாட்டானா!"

"பேஷாகச் செய்வான். இருந்தாலும் நம் முயற்சியும் கொஞ்சம் இருக்க வேண்டாமா! அந்தக் குட்டிக்குந்தான் வயசாகிவிட்டது. இனிமேல் நாம் பேசாமல் இருக்கக் கூடாது. ஒரு நல்ல வரனைப் பார்த்து இந்த வருஷத்திலேயே கலியாணத்தைப் பண்ணிவிட வேணும்."

"அவளுக்கு ஒருவன் இனிமேலா பிறக்கப் போகிறான்! எங்கே பிறந்திருக்கிறான் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டியதுதான் நம் வேலை. நானும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன்" என்றார் ரகுநாதன். இதற்குமேல் பேச்சுக் கொடுக்க ராகவனின் தாயாருக்கு இஷ்டமில்லை. "தம்பி தன் விஷயத்தில் துளிக்கூட இடம் கொடுக்காமலேயே பேசுகிறான்" என்று வருத்தப் பட்டாள். ராகவனுக்கும் படிப்பு முடிந்து விட்டது.

சரோஜாவுக்கு வரன் தேடும் விஷயமாய் ரகுநாதன் அடிக்கடி வெளியிடங்களுக்குப் போய் வந்தார். சிற்சில இடங்களுக்கு ராகவனையும் கூட அழைத்துச் செல்வார். ரகுநாதனுக்குத் தெரிந்த சில இடங்களில் "என்னய்யா இது. வீட்டில் ராஜாமாதிரி பையன் இருக்கும்பொழுது, எதுக்கு அலைகிறீரே!" என்று ரகுநாதனைக் கேட்டதை ராகவன் காதால் கேட்டிருக்கிறான். அதற்கு ரகுநாதன் 'ஜாதகம் பொருத்தமில்லை. இல்லாத போனால் நான் ஏன் ஸார் அலைய வேண்டும்!" என்று சொல்லுவார். அந்தப் பதில் ராகவனுக்கு ஆச்சர்யத்தைக் கொடுக்கும்.

"ஜாதகமாம், ஜாதகம்! வெளியுலகம் அறியாதவர். சரோஜாவின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளாமலேயே இப்படி வரனுக்கு அலைகிறாரே" என்று எண்ணி ஏங்குவான்.

அந்தச் சமயத்தில் பம்பாயிலிருக்கும் ராகவனின் நண்பன் அவனுக்கு ஒரு கடிதம் எழுதி யிருந்

தான். அதில் ராகவன் பம்பாய்க்குப் புறப்பட்டு வந்தால் வேலை கிடைக்குமென்றும் அதற்குத் தான் உதவி செய்வதாகவும், கூடிய சீக்கிரம் வரும்படியும் எழுதியிருந்தான். இது விஷயமாய் மாமாவின் அபிப்பிராயத்தைக் கேட்ட பொழுது "போய் வருவதைப் பற்றி எனக்கு ஒரு ஆட்சேபணை இல்லை; ஆனால் சரோஜாவின் கலியாணத்துக்குப் பின்னால் உன்னை அனுப்பலாம் என்று நினைத்தேன். வேலை கிடைக்கும் போலிருந்தால் போய் வா" என்று சொல்லிவிட்டார். அடுத்த வாரமே ராகவன் பம்பாய் கிளம்புவதற்கு ஏற்பாடாகிற்று. அதற்குள் எப்படியும் சரோஜாவைச் சந்தித்து அவள் மனத்தை அறிய வேண்டுமென்று துடியாய்த் துடித்தான் ராகவன்.

வழக்கம்போல சரோஜா தண்ணீர் எடுக்க ஆற்றுக்குச் சென்றாள். இதுதான் சமயம் என்று அவளுக்கு முன்னால் சென்று எதையோ தேடுவது போல பாவனை செய்து கொண்டிருந்தான்.

தண்ணீர்க் குடத்துடன் அங்கு வந்த சரோஜா, "என்ன அத்தான்! எதைத் தேடுகிறீர்கள்!" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"பம்பாய்க்குப் போவதற்காக நேற்று ஒரு சாமான் வாங்கிக் கொண்டு வந்தேன். அதைத் தான் தேடிக் கொண்டிருக்கிறேன்."

"ரொம்ப அழகுதான்; நீங்கள் தேடுகிற அந்தச் சாமான் இங்கே கிடைக்காது. அதிருக்கட்டும் அத்தான், நீங்கள் பம்பாய்க்குப் போனால் எங்களை யெல்லாம் மறந்துவிடுவீர்கள் அல்லவா!"

"அதெப்படி மறக்க முடியும்! யாரை மறந்தாலும் உன்னை நான் எப்படி மறந்துவிட முடியும், சரோஜா! ஆனால் நீதான் கலியாணமாகி விட்டால் என்னை மறந்து விடுவாய்."

"இது என்ன அத்தான் பரிஹாசம். கலியாணத்துக்கும் ஞாபக மறதிக்கும் என்ன சம்பந்தம்! அதிருக்கட்டும் நீங்கள் ஏன் கொஞ்ச நாளாகவே ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்!"

"மாமா படுகிற கஷ்டத்தை நினைத்துத்தான் வருத்தப்படுகிறேன். இவ்வளவு ஊர் ஊராய்ச் சுற்றியும் உனக்கு ஏற்ற வரன் கிடைக்கவில்லையே என்பதுதான் என் வருத்தம்."

"எல்லாம்தானே நடக்கிறது. அதற்கு நாம் ஏன் கவலைப்பட வேணும்!"

"இல்லை நான் பம்பாய்க்குக் கிளம்புவதற்குள் ஒன்றும் சேராது போலிருக்கிறதே. அம்மா சொல்வதுபோல் 'அப்பா என்னதான் ஊர் ஊராய்ச் சுற்றிச் சல்லடை போட்டுச் சலித்தாலும் உனக்கு வரப்போகும் பையன் என்னவோ இங்கேயே உனக்கு அருகில்தான் இருக்கிறான்.'

"அப்படி என்றால் நீ யாரைச் சொல்லுகிறாய்!"

"சரோஜா! நீ என் மனத்தை அறிந்து கொள்ளாமல் பேசுகிறாய் என்று நினைக்கிறேன்."

"நீங்கள் பேசுவது எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்று கூறிவிட்டுத் திரும்ப எத்தனித்தாள்.

ராகவன் சட்டென்று சரோஜாவின் கையைப் பிடித்துக் கொண்டு "சரோஜா!......" என்று ஆரம்பித்தான். சரோஜா கையைத் திமிரிக் கொண்டு "அத்தான்! நமது குடும்ப கௌரவம் நம் பண்பாடு எல்லாவற்றையும் நினைத்து நடந்து கொள்ளுங்கள். உங்களுக்கு என்ன அறிவு மழுங்கி விட்டதா!" என்று கன்னத்தில் அறைவதுபோல் கேட்டுவிட்டு இடுப்பில் இருந்த குடத்தைச் சரி செய்து கொண்டு விர்ரென்று ஆற்றை நோக்கிச் சென்று விட்டாள்.

இந்த எதிர்பாராத சரோஜாவின் ஆணித்தரமான பதில் ராகவனுக்கு வியப்பையும், பிரமிப்பையும் உண்டாக்கி விட்டது. சரோஜாவைச் சரியானபடி புரிந்து கொள்ளாமல் அவளிடம் தான் நடந்து கொண்ட விதத்தை நினைத்து வருந்தினான். அவன் முகம் 'குப்'பென்று சிவந்து விட்டது. அவமானம் தாள முடியாமல் தலை குனிந்து கொண்டான்.

இந்தச் சோக சம்பவம் நடந்து ஒரு வாரம் சென்று விட்டது.

ராகவனைப் பம்பாய்க்கு அனுப்பி வைப்பதற்கு ராகவனின் தாயாருக்கு இஷ்டமில்லாத போதிலும் வயிற்றுப் பிழைப்பையும் உத்தேசித்து ஒருவாறு அனுப்பச் சம்மதித்தாள். ராகவன் பம்பாய் கிளம்புவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து கொண்





"என் ஸார்! உங்கள் காருக்கு 'ஹாரன்' வேண்டிய தில்லையோ?"

"என் கார் ரோடு வரையில் போனால்தானே ஹாரன் வேணும்! ரோடுக்குப் போகும் பாக்கியம் என் காருக்குக்கிடைக்கவே இல்லை, ஸார்!"

டிருந்தான். ஆனால் மனம் என்னவோ குழம்பிக் கொண்டிருந்தது. பம்பாய்க்குக் கிளம்பும் பொழுது சரோஜாவிடம் சொல் லிக் கொள்ளாமலிருக்க முடியவில்லை.

"சரோஜா! நான் போய் வரட்டுமா!" என்றான் விரக்தியான குரலில்.

சரோஜா பதில் பேசவில்லை. கல, கல வென்று கண்ணீர் உகுத்து விட்டாள். ராகவன் பம்பாய்க்குப் பிரயாணமானான்.

ரகுநாதன் வரனுக்காகத் தேடாத இடமில்லை. சரியான வரனும் கிடைக்க வில்லை. சரோஜாவின் விவாகம் அடுத்த வருஷத்திற்கு ஒத்திப் போடப்பட்டது. ராகவன் பம்பாய் போய்ச் சேர்ந்தவுடன் மாமாவுக்குக் கடிதம் எழுதினான். இரண்டு மாதம் கழித்து நூறு ரூபாய் பணமும் ஓர் கடிதமும் வந்தது. அக்கடிதத்தில்,

"என் முதல் மாதச் சம்பளத்தைத் தங்களுக்கு அனுப்பி யிருக்கிறேன். என்னுடைய இந்த நிலைமைக்குத் தாங்களும் மாமியும்தான் காரணம். தங்களுடைய ஆசீர்வாதம் எனக்கு எப்பொழுதும் இருக்கும் என்று நம்புகிறேன். அம்மாவுக்கு என் நமஸ்காரங்கள். கூடிய சீக்கிரம் ஒரு தனி ஜாகை பார்த்துக் கொண்டு கடிதம் எழுது கிறேன். அம்மாவை அனுப்பி வைக்கவும். சரோஜாவுக்குக் கலியாண ஏற்பாடு செய்திருந் தால் அம்மா இருந்து கல்யாணம் முடிந்த பிறகு வரட்டும். சரோஜாவை நான் கேட்ட தாகச் சொல்லவேணும். இப்படிக்கு, ராகவன்."

சரோஜாவுக்கு அந்த வருடம் கலியாணம் நின்று போய்விட்டதால் ரகுநாதன் தன் தமக்கையைப் பம்பாய்க்கு அனுப்பி விட்டார். ராகவனின் திற மையும், நாணயமும் அவனை அவன் கம்பெனியில் ஓர் உயர்ந்த பதவி வகிக்கத் துணை புரிந்தது.

ஓர் பிரும்மச்சாரி நல்ல ஆபீஸில் உயர்ந்த பதவி வகித்து வருவதை அறிந்த பெண்ணைப் பெற்ற வர்கள் ராகவனை ஜாதகத்துக்கு அணுகினார்கள். "எதுவாயிருந்தாலும் மாமாவைத்தான் கேட்க வேண்டும் என்றும், அவர் பார்த்து எதைச் செய் தாலும் தனக்குச் சம்மதம்!" என்று திட்டமாய்ச் சொல்லி விட்டான். ராகவனின் கலியாண விஷய மாய் ரகுநாதனை அநேகர் நெருங்கினர். ரகுநாத னுக்கு எதை முடிப்பதென்று தெரியவில்லை. ராக வனுக்குக் கடிதம் எழுதினார். "அன்புள்ள ராக வனுக்கு, பம்பாயிலிருந்தும் இதர இடங்களிலிருந் தும் அநேக ஜாதகங்கள் வந்தன. சிற் சில ஜாத கங்கள் பொருத்தமாயிருக்கின்றன. நான் போட்ட நிபந்தனைகளுக்கு அவர்கள் இணங்குகிறார்கள். பெண்களும் இந்தப் பக்கத்திலேயே இருப்பதால் நீயும் அம்மாவும் இங்கு புறப்பட்டு வந்து பெண் ணைப் பார்த்து முடிவு செய்கிறீர்களா! உடன் பதில் எழுதவேணும். இப்படிக்கு, ரகுநாதன்."

"மாமாவுக்கு நமஸ்காரம். கடிதம் கிடைத்தது. தாங்களே பெண்ணைப் பார்த்தால் சரிதான் என்று அம்மா சொல்லுகிறார். பெண்ணை நாங்கள் பார்க்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. தாங்களே பார்த்து நிச்சயித்தால் சரிதான். எனக்கு அடுத்த மாதம் 15-ந் தேதியிலிருந்து ஒரு மாதம் லீவு கிடைக்கும். தை மாதமும் பிறந்து விடுவதால் லீவு முடிவதற்குள் ஓர் நாளைப் பார்த்து முகூர்த் தம் வைத்துக் கொள்ளலா மென்று அம்மா சொல் கிறார். பெண் வீட்டாரிடம் சொல்லி ஏற்பாடு செய்யலாம். கூடியவரை சரோஜாவின் கலியா ணத்தையும் இந்த லீவு முடிவதற்குள் வைத்துக் கொண்டால் மனத்துக்குத் திருப்தியாய் இருக் கும். ஏதாவது முடிவு செய்தீர்களா! ஒருவேளை கலியாணம் நிச்சயமாகி பத்திரிகை அனுப்பி வைத்தால் மூன் கூட்டியே நூறு பத்திரிகைகள் அனுப்பி வைக்கவும். இங்கு இருப்பவர்களுக்குக் கொடுக்க வேண்டும். இப்படிக்கு, ராகவன்."

இந்தக் கடிதத்தைத் தபாலில் போட்டுவிட்டு ராகவன் தன் தாயாரிடம் விஷயத்தைச் சொன் னான். இதைக் கேட்ட அவன் தாயார் ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டாள். பிறகு "சரோஜாவுக்கு நல்ல வரன் கிடைக்க வேண்டும். அவள் குணத் துக்கும் புத்திசாலித்தனத்துக்கும் ஏற்ற வரனாய் இருந்தால் நல்லது. உனக்கு எந்தப் பெண்ணாய் இருந்தாலும் பாதகமில்லை. நான் அவளை நம் குடும்பத்துக்கு ஏற்றவளாகச் செய்து விடுவேன். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது. எல்லா வற்றுக்கும் கடவுள் இருக்கிறார் நாம் நினைக்கிற படி நடக்கிறதா!" என்று சொன்னாள்.

ராகவனுக்குச் சரோஜா தன்னை அவமானப் படுத்திய சம்பவமும் அதே சமயத்தில் தன்னிடமே நேர்மையாக நடந்து கொண்ட அவள் உயர்ந்த பண்பும் தன்னுடைய அவசர புத்தியும் மாறி மாறித் தோன்றி அவனை வேதனைப் படுத்திக் கொண்டேயிருந்தது. அவனால் அந்தச் சம்ப வத்தை மறக்கவே முடியவில்லை.

ஏதோ ராகவனின் தாயார் சொன்னாளே ஒழிய அவள் மனத்துக்குள் சரோஜா தான் தனக்கு மரு மகளாக வர வேண்டும் என்று நினைத்தாள்.

பத்து தினங்கள் கழித்து ரகுநாதனிடமிருந்து ஒரு பத்திரிகைக்கட்டு வந்தது. அதை உடைத்துப் பார்த்த ராகவனுக்கு ஆச்சர்யத்தினாலும் வியப் பினாலும் முகம் விரிந்து மலர்ந்தது.

"ரங்கூன் ரகுநாதனின் குமாரி சௌ. சரோஜா வுக்கும் காலஞ்சென்ற ராமசாமி அவர்களின் குமாரன் ராகவனுக்கும் பாணிக்கிரஹணம் செய்வ தாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப் பட்டு..." என்பதைப் படித்தவுடன் ராகவனும் அவன் தாயா ரும் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது.

* * *

அன்று ஆற்றங் கரையில் தன் கன்னத்தில் அறைந்தாற்போல பதில் சொன்ன சரோஜா இன்று இன்பப் பாதையில் அம்மி மிதித்து அருந் ததியைக் காணத்தன்னை அழைத்துச் செல்லுவாள் என்று அவன் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்!

# DODGE

*Kingsway*












## UTILITY

**IT'S REALLY TWO CARS IN ONE**

**FOR BUSINESS**

Businessmen appreciate the many practical uses to which the Dodge Utility can be put as a delivery vehicle. Its strong built and all-steel body are meant for rugged use. It's fast, easy to drive and easy to clean, and it contains plenty of luggage space.

**FOR THE FAMILY**

Your family will love its sleek flowing lines and handsome look. Its wide vision, wide opening doors, comfortable seats and legroom make it a joy to ride.

**THE PREMIER AUTOMOBILES LTD.**

Factory: AGRA ROAD, KURLA
H. O. Construction House,
BALLARD ESTATE, BOMBAY




DEALERS:

ADDISON & CO., LTD.

MOUNT ROAD : MADRAS

# புதுமைக் கண்காட்சி

துஷ்யந்தன்

**வா**ங்க ஸார்! வாங்க! இப்படித்தான்! வரிசையாக பல வரிசைகள் இருக்கிறது. உங்களுக்கு எங்கே போக வேணும் என்று தோன்றுகிறதோ அங்கே போகலாம். அதுதான் சம்சார நிலயம். புதுத் தம்பதிகளுக்காக. இங்கே பாருங்க ஸார்! இவர்கள் இரண்டு பேரும் சுமார் முப்பது வருஷமாகக் குடித்தனம் பண்ணியிருக்கிறார்கள். சண்டை சச்சரவு என்ற பேச்சே கிடையாது. நல்ல இனிமையான 'மாதிரித் தம்பதிகள்' ஸார். நமஸ்காரம் பண்ணிக் கொள்ளுங்கள். ஆச்சா! அவர் பக்கத்திலே யிருக்கிறது மகன் வழிப் பேத்திகளும் மகள் வயிற்றுப் பேத்திகளும்தான். வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டுக் கரை சேர்ந்தவர்கள். மேடு பள்ளங்களைக் கண்டவர்கள். உங்களுக்கு இப்போதுதான் கல்யாணமாகி யிருக்கிறதில்லையா! சரி, இவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். சந்தேகம் ஏதாவது இருந்தால் கூச்சப்படாமல் கேளுங்கள். அதற்காக 'கன்சல்டிங் பீஸ்' என்று ஒன்றும் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை.



இந்தப் பக்கம் பார்த்தீர்களா? இது இன்னொரு 'செட்'. இரண்டு பேரும் ரொம்ப வறுமையாக பம்பாயில் 'ஒண்டுக் குடித்தனம்' இருந்தவர்கள். புதுக் குடித்தனம் வைக்கிறபோது வீடு கிடைக்கவில்லை என்னும் கஷ்டத்தைச் சமாளிக்க வழி சொல்லுவார்கள். ஒரு சின்ன அறைக்குள் எப்படி அழகாகக் குடித்தனம் செய்யலாம் என்பதைப் பற்றி உங்களுக்குச் சொல்லித் தருவார்கள்.

பக்கத்திலே யிருக்கிறவர்கள் 'நட்சத்திரத் தம்பதிகள்!' சினிமாவில் மட்டுமில்லாமல் சாதாரணமாக வீட்டில்கூட எப்படி ரசமாகப் பேசிப் பழகுவது என்பதை இவர்களிடமிருந்து நீங்கள் கற்றுத் தெரிந்து கொள்ளலாம்.

அது விவேகானந்தா மண்டபம். கட்டைப் பிரமச்சாரிகளுக்காக! உள்ளே யோகாசன நிபுணர்கள், குஸ்தி சொல்லித் தருகிறவர்கள் பலவகை விளையாட்டு நிபுணர்கள் எல்லாருமாகக் காத்திருக்கிறார்கள். எதை வேண்டுமானாலும் தாராளமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

உம்,...... நீங்கள் கல்யாணத்துக்காகத் தயாராக இருக்கும் பெண்ணா! இப்படி வாங்கோ! அதுதான் கல்யாண மண்டபம். அங்கே கல்யாண வயதுள்ள வாலிபர்கள் வரிசையாக உட்கார்ந்திருப்பார்கள். நேராகப் போங்கள். ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒரு 'நம்பர்' உண்டு. போகும் போது பார்த்துக் கொண்டு கடைசியில் பிரத்தியேக அறையில் நுழையுங்கள். அந்த 'நம்பர்' பிள்ளையாண்டானைப் பற்றிய விவரங்கள் எல்லாம் இருக்கின்றன. அதைப் பார்த்துத் தெரிந்து கொண்டபின் அந்தப் பிள்ளையாண்டானைக் கூப்பிட்டு மனம் விட்டுப் பேசலாம். இதற்கு ஒன்றும் கட்டணம் கிடையாது!



இது ஒரு நல்ல காரியம் இல்லையா!

இது ராமாயண மண்டபம். வயதானவர்களுக்காக ஏற்பட்டது. அற்புதமாகக் கதை சொல்வார் ராமாயண சாஸ்திரி. கேட்கிறவர்களின் சௌகரியத்துக்காகத் தனித் தனியாக படுக்கை போட்டிருக்கிறது. தள்ளாதவர்கள் நிம்மதியாகப் படுத்துக் கொண்டும் கதையைக் கேட்கலாம்!

அட, அம்பிப் பயலா! வாடா, உனக்கும் ஜோரான 'கேள்வி மண்டபம்' இருக்கிறது! அதோ வரிசையாக 'போர்டு' போட்டுக் கொண்டு உட்கார்ந்து இருக்கிறார்களே பார்த்தியா! ஒவ்வொருவரும் ஒரு விஷயத்திலே நிபுணர்கள். 'சரித்திரம்' என்றுபோர்டு போட்டு வைத்திருக்கிறாரே அவரிடம் போய் நீ சரித்திர சம்பந்தமாக என்ன வேணுமானாலும் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். "ஔரங்கசீப் பாட்டு பிடிக்காதவரா யிருந்தது நிஜந்தானா! அவர் பிகம் பாடினதைக் கேட்டுத்தான் இந்த முடிவுக்கு வந்தாரா!" இதுபோலக் கேட்கலாம். அவர் சலிக்காமல் பதில் சொல்லுவார். உங்கள் வாத்தியார் பையன்களிடம் கேட்கும் கேள்வியைப் போல 'எட்டாம் ஹென்றிக்கு எத்தனை மனைவிகள்!' என்பது போன்ற தலைவலிக் கேள்விகளை மட்டும் திரும்பத் திரும்பப் போடாதே. புதுக் கேள்வியாகக் கேளு!

வாங்க, ஆரம்ப எழுத்தாளரா! உங்களுக்கும் ஒரு மண்டபம் இருக்கிறது! இப்படி வாங்க! ஆயிரம் கதைகளை அழகழகாக எழுதி எட்டாயிரம் கதைகளைப் பெட்டியிலே வைத்திருக்கும் ஜாம்பவான் இவர். மூச்சு விடும் முன்னால் மூவாயிரம்கட்டுரை எழுதுகிற 'மூக்குத்தி' இவர். மூன்று பத்திரிகைகளிலே இருந்து திரும்பி வந்த கதையை எப்படி நாலாவது பத்திரிகைக்கும் 'ஜாக்கி'யுடன் தள்ளி விடலாம் என்று இவர் வழி சொல்லித் தருவார்!

நீங்கள் என்ன புதிதாக கார் வாங்கி யிருக்கிறீர்களா ஸார்!

உங்களுக்கும் ஒரு தனி இடம் இருக்கிறது. அதோ உட்கார்ந்திருப்பவர் ரொம்பவும் அனுபவப் பட்டவர். விபத்துக்களை எப்படித் தவிர்ப்பது என்பதைச் சொல்லா விட்டாலும் விபத்து ஏற்பட்டால் தண்டனை யில்லாமல் எப்படித் தப்பித்துக் கொள்ளலாம் என்பதை விளக்கமாக உங்களுக்குச் சொல்லுவார்.

இன்னும் வருமான வரி உத்தியோகஸ்தர் கண்ணிலே எப்படி மண்ணைத் தூவலாம் என்பதைப் பற்றிச் சொல்கிறவர்கள்கூட ஒரு பக்கத்தில் இருக்கிறார்கள் ஸார்!

இதுதானா! இன்னும் ஜோதிடர் நிலயம் இருக்கிறது. வான சாஸ்திர மண்டபம் இருக்கிறது. பட்சி சாஸ்திர மண்டபம்; ரேகை சாஸ்திர மண்டபம் இருக்கிறது!



என்ன இதெல்லாம் மலைப்பாகவும் வியப்பாகவும் யிருக்கிறதா!

இருக்காதா பின்னே! பெருங்காய டப்பாக்களையும், ஹேர் ஆயில், பல் பொடி டப்பிகளையும் நிறைத்து வைத்த ஸ்டால்களையே பார்த்துப் பார்த்து உங்கள் கண்கள் அலுத்து விட்டன. எங்கள் கண்காட்சியில் அதெல்லாம் ஒன்றும் கிடையாது ஸார்! காது தலை எருமை, தாமரைப் பெண் போன்ற அவமானச் சின்னங்களும் கிடையாது ஸார்! எங்கள் கண் காட்சி புதுமைக் கண் காட்சி! வந்து பாருங்கள்!

ராகவன் ஆபீஸிலிருந்து வரும்பொழுதே களைப்புடன் வந்தான். விமலா காப்பியை ஆற்றி ஒரு கையில் எடுத்துக் கொண்டு மற்றொரு கையில் டிபன் தட்டுடன் வந்து மேஜையின்மேல் வைத்து விட்டு உள்ளே போய்விட்டாள். அரை மணி நேரங் கழித்து ஏதோ காரியமாக அங்கு வந்தவள் மேஜையின்மேல் இருந்தவைகள் அப்படியே இருப்பதையும் ராகவன் ஏதோ யோசித்துக் கொண்டிருப்பதையும் பார்த்தாள்.

“ஏன், எந்தக் கோட்டையைப் பிடிக்க இவ்வளவு யோசனை?” என்றாள் விமலா.

ராகவன் மௌனமாக இருந்தான்.

விமலா திரும்பவும் கேட்கவே ராகவன் “ராதை எங்கே? அவளைக் காணுமே” என்று கேட்டான்.

“ராதை அவள் தோழியின் வீட்டுக்குப் போயிருக்கிறாள். ஏன் என்ன விசேஷம்? அதற்கும் உங்கள் யோசனைக்கும் என்ன சம்பந்தம்?” என்று ஆவலோடு கேட்டாள் விமலா.

“எல்லாம் ராதையின் விஷயமாகத்தான். அன்று வந்து பார்த்துவிட்டுப் போன பையனுக்கு நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை வேண்டுமாம். அது அல்லாமல் மேலே இரண்டாயிரத்துக்குச் சீர்கள் வேறு செய்ய வேண்டுமாம். இவைகளைத் தவிர கல்யாணச் செலவு வேறு இருக்கிறது. அவ்வளவுக்குச் செய்ய நம்மால் முடியுமா? அதற்கு மேல் தீபாவளி, கார்த்திகை முதலியவைகளுக்குச் செலவில்லையா? நான் பார்க்கும் வேலையோ விலையில்லாத வேலை. முதலாளி மனது வைத்தால் உடனே வீட்டுக்கு அனுப்பி விடுவார். பேசாமல் அந்த மிராசுதார் ராமய்யருக்கே இரண்டாந்தாரமாகக் கட்டிக் கொடுத்து விடலாம். நமக்கும் செலவொன்று மிராது. ஐம்பது வயதானாலும் பார்ப்பவர்கள் முப்பது முப்பத்தைந்து வயதுதான் மதிப்பிடுவார்கள். அதனால் என்ன? நிறைய சொத்து இருக்கிறது. நம் குழந்தையை நன்றாக வைத்துக் கொள்வார்” என்று சொன்னான் ராகவன். அவன் மனம் வேதனைப் பட்டிருந்தது.

அப்பொழுது விமலாவின் சிந்தனைக் குதிரை ஐந்து வருடங்களுக்கு முன்னால் அவளைப் பிடித்து இழுத்துச் சென்றது.



* * *

அப்பொழுது அவளுக்கு வயது பதினாறு. எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணியிருந்தாள். சுற்று வட்டாரத்திலேயே மிகுந்த அழகி. அழகிருந்து என்ன? படிப்பிருந்து என்ன? பணமல்லவா பிரதானம். சிறு வயதிலேயே தாய் தந்தையை இழந்து அண்ணன் சுந்தரத்தின் அன்பிலே மிகுந்த செல்லமாக வளர்க்கப் பட்டவள். சுந்தரத்துக்கு ஏதோ ஒரு கம்பெனியில் நூற்று ஐம்பது ரூபாய் சம்பளம். அதில் நாலு ஜீவன்கள் குடும்பம் நடத்தியாக வேண்டும். சுந்தரத்தின் அதிர்ஷ்ட வசத்தினால் அவனது மனைவி சாந்தா கொஞ்சம் பசையுள்ள குடும்பத்திலிருந்து வந்தவள். விமலாவோ ஆரம்பத்திலிருந்தே மன்னியை வெறுக்க ஆரம்பித்தாள். தனது அண்ணனின் அன்பைப் பங்கு போட வந்தவள் என்ற ஆத்திரத்தில் அவளுடன் சரிவர முகங் கொடுத்துப் பேசுவதில்லை. அவள் பேச வந்தாலும் வெடுக்கென்று பதில் பேசிவிடுவாள். ஆனால் சாந்தா பெயருக்கேற்ற சாந்த குணமுடையவள். அவள் குடும்பம் பரம்பரையாகப் பண்பாடுள்ள பெரிய குடும்பம். அக்குடும்பத்தில் அவளே மூத்தவளாதலால் பொறுமையே பூஷணமாகக் கொண்டவள். ஆதலால் அவள் விமலாவை தனது சொந்த சகோதரியாகப் பாவித்து அவள் குணத்தைப் பொருட்படுத்தாது இருந்தாள். விமலாவின் வெறுப்பு மட்டும் அதிகரித்து வந்தது.

விமலாவின் கல்யாணத்துக்காகச் சுந்தரம் பட்டபாடு கொஞ்ச நஞ்சமில்லை. ஆனால் என்ன பிரயோசனம். இளைஞனாக இருந்தால் வரதட்சிணை; இல்லாவிட்டால் வயது அதிகமாக இருந்தது. இந்தச் சங்கடத்துக்குச் சுந்தரம் என்ன செய்வான் பாவம். அலைந்து அலைந்து அலுத்துப் போய் விட்டான். ஒன்றும் புரியாமல் தவித்தான்; தடுமாறினான்.

ஒரு நாள் பிற்பகல் இரண்டு மணிக்குப் பொசுக்கும் வெய்யிலில் சுந்தரம் அலைந்து விட்டு அப்பாடா வென்று கூடத்தில் வந்து உட்கார்ந்தான். சாந்தா அவனுக்காக இலை போட்டுவிட்டு செம்பில் ஜலம் எடுத்துக் கொண்டு வெளியில் வந்தாள். சுந்தரம் காலை அலம்பிக் கொண்டு சாப்பிட உட்கார்ந்தவன், "விமலா எங்கே? சாப்பிட்டு விட்டாளா?" என்று கேட்டான். அவன் முகத்தில் பலவித எண்ண அலைகள் மோதிக்கொண்டிருந்தன.

"அவள் சாப்பிட்டு விட்டு குழந்தையைத் தூங்கப் பண்ணிக் கொண்டிருக்கிறாள்" என்று சொல்லிவிட்டு, "நீங்கள் போன காரியம் என்னவாயிற்று" என்று கேட்டாள்.



# தியாகம்

ஜானகி

"என்னவாவது? அன்று வந்து பார்த்த வரனுக்கு நாலாயிரம் ஐயாயிரம் வரை செய்ய வேண்டுமென்கிறார்கள். அவ்வளவுக்கு முடியுமா? அதைவிட அந்தக் கோடி வீட்டுக் கோபாலய்யருக்குக் கொடுத்தால் நமக்கு ஒரு தம்படிகூட செலவில்லை. ஏதோ வயது கொஞ்சம் அதிகம் ஆகிறது. அதனால் என்ன? விமலாவைப் பச்சைக் கிளிமாதிரி வைத்துப் பாதுகாப்பார்" என்றான்.

அந்தச் சமயம் தண்ணீர் குடிப்பதற்காக வந்த விமலா இந்தப் பேச்சைக் கேட்டவுடன் மிகவும் வருந்தினாள். இதுவும் மன்னியின் சூழ்ச்சியோ, என்று சந்தேகிக்கலானாள். மன்னி என்ன பதில் சொல்லுகிறாள் என்று காது கொடுத்துக் கவனிக்கலானாள்.

சுந்தரத்தின் வார்த்தையைக் கேட்டதும் சாந்தா, "பணமில்லை என்பதற்காகக் குழந்தையைக் கிணற்றில் தள்ளுவதா? வேறு எங்காவது கடன் கேட்டுப் பார்ப்பது தானே!"

"கடனா! இந்தக் காலத்தில் கடன் யார் தருவார்கள். அந்தக் கடனைத்தான் நம்மால் அடைக்க முடியுமா? வருவதே குடும்பம் நடத்தப் போதவில்லையே. அப்படியும் கேட்டுப் பார்த்தாயிற்று. எல்லோரும் கையை விரித்து விட்டார்கள். பிறகு தான் இந்த முடிவு செய்தேன்" என்றான்.

சாந்தா சிறிது நேரம் யோசித்தாள். பிறகு சுந்தரத்தை நோக்கி, "இந்த வரனையே முடித்து விடுங்கள். பணத்தைப் பற்றி யோசிக்கவே வேண்டாம். என்னிடமுள்ள நகைகளை விற்றால் ஒரு மூவாயிரம் தேறும். அப்பாவிடம் சொல்லி ஒரு மூவாயிரம் ரூபாய்க்கு ஏற்பாடு செய்கிறேன். சமயம் நேர்ந்த பொழுது கொடுத்து விடலாம்."

அதைக் கேட்ட சுந்தரம் திடுக்கிட்டான். "சாந்தா நான் உன்னை மணந்து இத்தனை வருஷமாகியும் ஒரு திருகுக்கூட வாங்கித் தரவில்லையே! அப்படி இருக்கையில் உன்னுடைய சொந்த நகைகளை விற்க எனக்கு என்ன உரிமை? பார்ப்பவர்கள் சிரிக்கமாட்டார்களா? அதுதான் நியாயமா?" என்றான்.

"போதுமே நியாயமும் அநியாயமும். சமயத்துக்கு உதவாதது எதற்கு? நகைகள் போட்டுக் கொண்டால் தான் அழகா? எழுந்திருங்கள். அந்த வரனையே முடித்து விடுங்கள். பிறகு பணம் வந்தபொழுது செய்து கொண்டால் போச்சு" என்றாள்.

இதைக் கேட்ட விமலாவுக்கு மெய் சிலிர்த்தது. தன் மனத்தில் உருவாகியிருந்த மன்னிக்கும் நேரில் இருக்கும் மன்னிக்கும் உள்ள வித்தியாசத்தை உணர்ந்தாள். உடனே மன்னியிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். பிறகு கல்யாணமும் நடந்தது. இப்பொழுது ராகவனுடன் தான் வாழும் வாழ்வு மன்னியின் தியாகத்தினால் தானே என்று நினைத்தவுடன் அவள் கண்களில் இருந்து ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. தன்னை மறந்தாள்.

"என்ன விமலா, திடீரென்று இத்தனை நேரம் மௌனம். ஏன் கண்ணீர் விடுகிறாய்?" என்று அன்போடு கேட்டான் ராகவன்.

"ஒன்றுமில்லை. ஏதோ பழைய நினைவு வந்தது. நேரமாகி விட்டது. எழுந்திருங்கள். ராதைக்கு அந்தப் பையனையே முடித்து விடுங்கள். பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ரூபாய் நாலாயிரத்துக்கு மேல் என்னிடமே நகைகள் இருக்கின்றன" என்றாள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே.

அதே சமயம் தூரத்திலிருந்த கோயிலிலிருந்து வந்த 'டாண்! டாண்!' என்ற மணி ஓசையும் 'கல கல' வென்று சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்த ராதையின் களங்கமற்ற சிரிப்பொலியும் கலந்து வந்தன!


உலகெங்கிலும்
நேர்த்தியான கார்களுக்கேற்ற
நேர்த்தியான டயர்கள்
Firestone
பயர்ஸ்டோன்
கம்-டிப்பிடு டயர் இது ஒன்றே

வி. என். குமாரசாமி

## 19. வழுக்கை, தலை நரை

வழுக்கை, தலை நரை முதலியன வயது முதிர்ச்சியின் சின்னங்கள். ஆனால் இந்தக் காலத்தில் சிறு வயதினருக்கும் இவை ஏற்பட்டு விடுகின்றன. எங்கு பார்த்தாலும் சிறு வயதினர்கள் வழுக்கைத் தலையுடனும், நரை முடியுடனும் காட்சி அளிப்பதைச் சர்வ சாதாரணமாய்ப் பார்க்கலாம். ஒரு விஷயத்தில் அதிகமாய்த் தேர்ச்சி அடைந்தவரைப் பார்த்து 'அவர் அந்த விஷயத்தில் தலை நரைத்தவராயிற்றே' என்றும், அதிக கஷ்டப்பட்டவரைப் பார்த்து 'கஷ்டகாலத்தில் உழன்று உழன்று அவருக்குத் தலையுக் வழுக்கையாகிவிட்டது' என்றும் நாம் சாதாரணமாகச் சொல்வது வழக்கம். ஆனால் எதிலுமே தேர்ச்சி அடையாத, உண்மையான கஷ்டத்தின் கோட்டையும் மிதிக்காத இளம் வயதினர்களைப் பற்றி என்னவென்று சொல்லுவது! இளமையில் தோன்றும் இம் முதுமையின் சின்னம், வாழ்க்கையில் ஏற்படும் ஒரு முட்டுக் கட்டையாகும். இதனால் மனம் வருந்துவது அவர்களுக் கல்லவா தெரியும்!

இவைகளை மறைக்க எத்தனையோ வித மருந்துகள்! வாரத்தில் ஒரு அங்குலம் வீதம் கத்தையாக வழுக்கைத் தலையில் முடிவளர்க்கும் தைலங்கள்முதல், நரை முடியை ஒரே வாரத்தில் கரும் கூந்தலாக்கும் தைலங்கள் வரை பல வித மருந்துகள் உண்டு. இதன் விளம்பரங்களை எங்கு பார்த்தாலும் கண்ணைப் பறிக்கின்றது. நமது நாட்டுப் பத்திரிகை விளம்பரங்களைப் பார்த்தாலே இப்பொழுது 'நமது நாட்டின் மக்களுடைய குறை யென்ன! தேவை யென்ன!' என்பது நன்றாய் விளங்கி விடும்.

''வயதானவர்கள் வாலிபர்களாக என்ன வழி!'' ''சிறு வயதினர்களைப் போலத் தோற்றமளிப்பது எப்படி!'' என்ற விளம்பரங்களை அடிக்கடி பார்க்கலாம். வயது முதிர்ந்த பெரியவர்கள் சதா மைப்பூச்சுக்களையும், லேபங்களையும், லேபனங்களையும் உபயோகிக்கும் இந்தக் காலத்தில் இளம் வயதினர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்! காளைகளாய்க் கட்டுமஸ்தாய், ஒவ்வொருவரும் தனிச் சுடர்களாய்த் திகழவேண்டிய வயதில் முதுமையின் சின்னம் ஏற்பட்டால் என் செய்வர்! அதைப் போக்கப் பலவித விளம்பரங்களைப் பார்த்துக் காசைக் கரியாக்குகின்றனர். ஆனால் இவர்களுடைய குறைகள் தீருவதாய் இல்லை. அதற்குப் பதில் வழுக்கையும், நரையும் முன்னிலும் அதிகமாகின்றது. இதுவரை வழுக்கையைப் போக்கடிக்கக் கூடிய மருந்து கண்டு பிடித்ததாகவும் தெரியவில்லை. நரையும் அவ்வாறே.

வழுக்கையும், நரையும் எவ்வாறு உண்டாகின்றன என்னும் விவரம் சரிவரத் தெரிந்து கொண்டால், இம்மாதிரிப் பிரயாசைகள் எல்லாம் வீண் என்பது தெளிவாகி விடும்.

அந்தந்த தேசத்தின் சீதோஷ்ண மாறுதலுக்குத் தக்கபடி எப்படித் தோலின் நிறம் மாறுதலடைகின்றதோ, அதைப் போலத் தலை முடியின் நிறமும் மாறுதலடைகின்றது. சிலருக்குக் கடுமையாய் நீண்டு வளரும். சிலருக்குச் செம்பட்டையாக இருக்கும். சிலருக்கு வெளுத்த பொன்னிறமாய் இருக்கும். சிலருக்குச் சுருண்டு வளரும். ஆனால் எல்லாவித வர்ண முடியும் நாற்பது, ஐம்பது வயதுக்குமேல் வெளுக்க ஆரம்பிக்கின்றன. இந்த வயதில் இயற்கையாய் ஏற்படும் கோளங்களின் மாறுபாட்டினால் உண்டாவதாகும்.

ஒவ்வொரு மயிர்க்காலுக்கும் ஒரு பையுண்டு. அதற்கு வேர் உண்டு. அந்த வேருக்கு ரத்தம் பாய்ந்துதான் முடி வளர வேண்டும். ரத்தத்தில் எதுவரை பிட்யூடரி கோளத்தினுடையவும், தைராய்ட் கோளத்தினுடையவும் ஹார்மோன் ரசம் சரிவரக் கலக்கப்பட்டு, இந்த மயிர்க்கால்களுக்கு வருகின்றதோ அதுவரை முடி நரைக்காமல் வளருகின்றது. அந்த ரசம் இயற்கை விதிப்படி நாற்பது, ஐம்பது வயதானதும் குறையும் போது முடியும் நரைக்க ஆரம்பிக்கிறது. நரை என்பது மயிர்க்கால் உள்ள வர்ணத்தை உண்டாக்கும் ஒரு வித ஜீவசத்து மாய்ந்து விடுவதே ஆகும். அப்படி ஆவதினால் முடி வளராமல் நின்று விடாது. வேண்டிய வர்ணம் கிடைக்காததினால் முடி வெண்மையாகவே வளரத் தொடங்கும்.

இம்மாதிரி வயதானவர்களுக்கு ஏற்படுவது இயற்கை. ஆனால் சிறுவயதினர்களுக்கு நரைப்பதன் காரணம் என்ன! அவர்களுக்கும் அநேகமாய் இந்தக் கோளங்களின் ரசக் குறைவே காரணமாகும். கோளங்களுக்குக் குறைவு பல விதத்தினால் ஏற்படலாம். பல தலைமுறைகளாய்ச் சிறுகச் சிறுகக் குறைவு ஏற்பட்டு இந்த நிலைமை ஏற்படலாம். கண் மூடித்தனமாய் வாழ்வதனாலும் ஏற்படலாம். கண்டதைக் கண்ட நேரத்தில் புசிப்பதினாலும் ஏற்படலாம். இவைகளைக் கண்டு பிடிக்க அவரவர்களின் வாழ்க்கை வரலாற்றை அறிந்தால்தான் முடியும். அதற்குத் தகுந்தாற்போல் பரிகாரமும் அளிக்கவேண்டும். அதை விட்டு விட்டு வெறும் தைலங்களைத் தடவுவதினாலும், மருந்துகளைச் சாப்பிடுவதினால் மட்டும் இக் குறைகளை நீக்கிவிட முடியாது. ஆசனங்களால்தான் ஓரளவு குறைக்க முடியும். பாதுகாப்பளிக்க முடியும். ஆனால் முற்றிலும் நீக்கிவிட முடியும் என்று சொல்லுவதற்கில்லை.

சிலர், யோகாசனம் என்றதும் ''நரை மயிர் கருக்குமாமே! யோகிகளெல்லாம் பல்லாண்டுகள் நரையும், திரையுமின்றி வாழ்ந்திருக்கிறார்களே! நாமும் செய்தால் அம்மாதிரி ஆகிவிடலாம்'' என்று நினைக்கின்றனர். சிலர் சிரசாசனத்தை ஓரிருமாதம் செய்ததும், இன்னமும் நரை மாறவில்லையே என்பார்கள். பல தலைமுறைகளாயும் மற்றும் பல காரணங்களாலும் மயிர்க்காலிலுள்ள வர்ணச் சத்து மாய்ந்து விட்டதை இப்பொழுது சிரசாசனத்தைச் சிலநாள் செய்ததினால் மாற்றிவிட முடியுமா, என்ன! ஒருவேளை இனி நரைக்காமல் இருக்கலாம். அதுவும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. நம்முடைய சக்தி எத்தனையோ விதத்தில் வீணாகிக் கொண்டிருக்கிறது. தவிர இவ்வுடல்

நமது பெற்றோர்களால் அளிக்கப்பட்டது. இதை ஓரளவுதான் நம் முயற்சியால் திருத்த முடியும். நாம் விணாக்கும் சக்திகளைக் கட்டுப்படுத்தி யோகிகளைப் போல வாழ்ந்தால் நரை ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் அவை எளிதல்ல. நம்மைப் போல் சாதாரண குடும்பஸ்தர்களால் அப்படியிருக்கவும் முடியாது. வாழ்க்கையில் முடி நரைக்காமல் என்றும் கருப்பாய் வைத்துக் கொள்ளுவதே நமது பிரச்னையல்ல. ஆரோக்யமாய் இருப்பதே முக்கிய பிரச்னையாகும். ஆசனம் செய்வதால் மற்றவர்களைப்போலத் தலை சீக்கிரம் நரைக்காமல் இருக்கலாம். சிறிது நரைத்தவர்கள் செய்தால், இன்னும் அதிகம் நரைக்காமல் இருக்கலாம். ஆனால் நரைத்த முடி கருக்கும் என்று சொல்லுவதற்கு இல்லை. இப்பொழுதிருந்தாவது சிரசாசனம் செய்து வந்தால், ஒருக்கால் நமக்கு அனுகூலமாகாவிட்டாலும் பரவாயில்லை. பிறகு வரும் நமது சந்ததிகளுக்காவது சிறு வயதில் நரைக்காமல் இருக்கும். சிறுவர்களும், சிறுமியர்களும் சிரசாசனம் செய்து வந்தால் அவர்கள் பெரியவர்களாகும்போது சீக்கிரமாய் மற்றவர்களுக்கு முடி நரைப்பதுபோல் நரைக்காது.

இவ்வளவு பொறுமையும் நம்பிக்கையும் இந்தக் காலத்திய அவசர அலங்கோல வாழ்க்கையில் உண்டாகுமா! மருந்துகளைச் சாப்பிட்டு, அது ரத்தத்தில் ஊறிக் குணம் செய்யும் வரையில் பொறுத்திருக்க முடியாமல், நேரடித் தாக்குதல் போல், ஊசிகளின் மூலம் நேராய் மருந்தை ரத்தத்தில் சேர்க்கும் அவசர சிகிச்சைக் காலமான இக்காலத்தில் இவ்வளவு பொறுமையும் நம்பிக்கையும் உண்டாவது கஷ்டம்தான். ஆனால் இதைத்தவிர வேறு மார்க்கமே கிடையாது என்பது நிச்சயமாய்த் தெரியும்போது, வீணாக வாதமிடுவதில் பிரயோஜனமென்ன!

நரைக்குக் காரணம் வர்ண உயிர்ச் சத்துக்கள் மாய்ந்துவிடுவதே என்றால், வழுக்கைக்குக் காரணம் மயிர்க்காலுக்கு ஆதாரமான பையே வறண்டு மாய்ந்து விடுதலேயாகும். என்னதான் ஹார்மோன் ரசங்கள் ரத்தத்தின் மூலமாக இந்தப் பைக்குப் பாய்ந்தாலும், அதைக் கிரகித்து முடியை வளர்க்கும் சக்தி அதற்கு இருந்தால்தானே! வேர் காய்ந்துவிட்ட பின் என்னதான் எரு வைத்தாலும், தண்ணீர் பாய்ச்சினாலும், மறுபடியும் செடி துளிர்க்குமா! எனவே வழுக்கை விழுந்த இடத்தில், மறுபடியும் முடி வளரும் என்பது ஆகக் கூடிய காரியமல்ல. வழுக்கை விழுந்தவர்களுக்கு, அந்த இடத்தில் போகும் ரத்தத்திலுள்ள ஹார்மோன்கள் வேறு பக்கம் திருப்பப்பட்டு, அந்தச் சத்தையும் சேர்த்து வேறு இடங்களில் ரோமம் அதிகம் வளரும். இதைத் தடுக்க முடியாது. எனவே சிரசாசனம் செய்து வந்தால் இன்னும் இருக்கக் கூடிய முடியும் விழுந்து அதிகம் வழுக்கையாகாமல் தடுக்கலாம். சாதாரணமாய் மற்ற எல்லோரும் செய்தால் வழுக்கையைத் தடுக்க முடியும். வழுக்கை விழுந்தவர்களும், நரை உண்டானவர்களும் செய்

## அட, நாராயணா!

டாக்டர் நாராயணன் கைராசிக்காரர். ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலை செய்வார். அவரைத் தேடி ஏராளமான நோயாளிகள் வருவார்கள். வீட்டைத் தேடிவரும் நோயாளிகளை வீணில் காக்க வைப்பதற்கு அவருக்குப் பிடிக்காது. எந்த நோயாளியாக இருந்தாலும் அவர் அறைக்குள் வரும்போது சட்டை பனியன் முதலியவைகளைக் கழற்றிக் கொண்டு டாக்டரின் சோதனைக்குத் தயாராக இருக்க வேண்டும். காரணம், 'சட்டையைக் கழட்டு பனியனைக் கழட்டு' என்று சொல்லுவதற்குக் கூட அவருக்கு நேரமே இருப்பதில்லை. அவ்வளவு வேலை!

இதற்காக ஒரு கம்பவுண்டரை டாக்டர் நாராயணன் நியமித்திருந்தார்.

அவருடைய புகழைக் கேள்விப்பட்டு வெளியூரிலிருந்து ஒரு நோயாளி டாக்டரைப் பார்க்க வந்தார். முன் அறையில் இருந்த கம்பவுண்டர் அந்த நோயாளியிடம் 'தங்கள் சட்டை பனியன் முதலியவைகளைக் கழட்டி விடுங்கள்' என்றார். சற்று நேரத்துக்கெல்லாம் டாக்டரின் அறையிலிருந்த நோயாளி வெளியில் வரவே 'நீங்கள் உள்ளே போகலாம்' என்றார் கம்பவுண்டர்.

புதிய நோயாளி "சட்டை முதலியவைகளைக் களையத்தான் வேண்டுமோ!" என்றார்.

"ஆமாம்; அப்போதுதான் டாக்டர் உங்களைச் சோதனை செய்வார்."

"ஐயா! எனக்குத் தொண்டையில்தான் கோளாறு" என்றார். கம்பவுண்டர் அவரைப் பேச விடவில்லை. "தயவு செய்து சட்டை முதலியவைகளைக் களைந்துவிட்டு உள்ளே போங்கள்" என்று சொல்லி விட்டார்.

புது நோயாளிக்கு வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. உள் கால் சட்டையைத் தவிர எல்லா ஆடைகளையும் களைந்து விட்டு டாக்டர் அறைக்குள் சென்றார். அங்கு இன்னொருவர் ரமண ரிஷி போல கௌபீனத்துடன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார்.

அவரைப் பார்த்து புதிய நோயாளி, "என்ன விசித்திரமான டாக்டர் ஐயா! தொண்டைக் கோளாறு என்றால்கூட ஆடைகளைக் களையச் சொல்லுகிறார்களே!" என்று அங்கலாய்த்துக் கொண்டார்.

உட்கார்ந்திருந்தவர் "நீங்களாவது தேவலாமே சார்! தொண்டையிலாவது வியாதி என்று வந்திருக்கிறீர்களே! எனக்கு ஒரு வியாதியும் இல்லை. என் நண்பர் டாக்டருக்குப் பணம் கொடுத்துவிட்டு வரச் சொன்னார். அதைக் கொடுத்துவிட்டுப் போக வந்தேன்" என்றார்.

"அட நாராயணா!" என்று சொல்லுவதைத் தவிர வேறு ஒன்றும் தோன்றவில்லை அந்தப் புது வியாதியஸ்தருக்கு. — பாலு

**மீண்டும் பாதி விலைக்குக் குறைவான சலுகை!**

**15 நாட்களுக்கு மட்டும்**

புகழ் வாய்ந்த ஸ்விஸ் பாக்டரியில் தயாரித்த கைக் கெடிகாரங்கள்.

ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம் கொண்டவை.



| | ஒரிஜனல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| ஜெர்மன் பாக்கெட் வாட்ச் | 24/- | 11/- |
| ,, உயர் ரகம் | 28/- | 13/- |
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | 40/- | 19/- |

No. 525  Size 9¾'''

| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 96/- | 45/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 100/- | 48/- |

No. 526  Size 10½'''

| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 98/- | 48/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 110/- | 52/- |

No. 527  Size 5¼'''

பிராத் ஷேப்

| | | |
|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் கேஸ் | 45/- | 22/- |
| 5 ஜுவல் ரோல்டு கோல்டு | 52/- | 25/- |

இரண்டு கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**
POST BOX NO. 11428, CALCUTTA



# தக்ஷிண ரயில்வே

## "விலக்கப்பட்ட" சாமான்கள் என்றால் என்ன என்பதை நீங்கள் அறிவீர்களா?

பொன், வெள்ளி, முத்துக்கள், ரத்னங்கள், ஆபரணங்கள், கடிகாரங்கள், ஜௌாக்குகள், பட்டுகள், சால்வைகள், சங்கீதக் கருவிகள், ரேடியோ செட்டுகள் மற்றும் அனேக சாமான்கள் "விலக்கப்பட்ட" பொருள்கள் என்று இந்த ரயில்வேயின் டைம் டேபிள்ஸ் & கைடு புத்தகத்திலும் இந்திய ரயில்வே கான்பரன்ஸ் அசோஸியேஷன் கோச்சிங் டாரிப் நெ. 15-லும் கூட்ஸ் டாரிப் நெ. 28-லும் தொகுக்கப்பட்டுள்ளன.

மேற்குறித்த மதிப்பு வாய்ந்த பொருள்களடங்கிய எந்த ஒரு பாக்கேஜ் ரயில் மூலம் அனுப்பப் பட்டாலும், அந்த பாக்கேஜிலிருக்கும் சரக்குகளின் மதிப்பு ரூ. 300 க்கு அதிகமாக இருப்பின், அனுப்புபவர் சரக்குகளின் மதிப்பை முன்னதாகத் தெரிவித்து வழக்கமான கட்டணத்துடன் குறிப்பிட்ட சதவிகிதம் அதிகக் கட்டணம் செலுத்தினாலொழிய ரயில்வே நிர்வாகஸ்தர்கள், பாக்கேஜிற்கு ஏற்படும் நஷ்டம், சேதம் குறைபாடு முதலியவை பற்றி எவ்விதப் பொறுப்பும் எடுத்துக்கொள்ள மாட்டார்கள்.

இது விஷயமான பூரா விவரமறிய உங்களருகிலுள்ள ஸ்டேஷன் மாஸ்டரிடம் விசாரிக்கலாம். அல்லது மேற்குறித்த புத்தகங்களைப் பார்க்கலாம்.

சீப் கமர்ஷியல் சூபரிண்டெண்டெண்ட்

தால், அவர்களுடைய சந்ததிகளுக்கு, இவர்களைப் போலக் கஷ்டம் ஏற்படாமல் முடியின் வைகள் பலப்பட்டுத் திடமாகும். ஆசனம் பழகுபவர்களுக்கு மேலும் வழுக்கை விழாமல் இருக்கும்.

சிலருக்கு டைபாயிட், ஜுரம், அம்மை முதலியவைகளினால் டாக்ஸின் கிருமிகள் ரத்தத்தில் அதிகம் கலந்து முடி உதிருவதும் உண்டு. கடுமையான மருந்துகள் அருந்துவதினால் அதனுடைய விஷத் தன்மை ரத்தத்தைக் கெடுத்து அதனாலும் முடி உதிரலாம். கண்மூடித்தனமாய் வாழ்க்கையில் கட்டுதிட்டமில்லாமல் திரிபவர்களுக்குச் சக்தி குறைவேற்படும் போதும் முடி உதிரலாம். ஸ்திரீகளுக்குப் பிரசவமானபோது சக்தியிழந்து பின் புதிய ரத்தம் ஊறும்போதும் முடி உதிரலாம். உணவு ஞானமில்லாமல் கண்டதைச் சாப்பிடுவதினாலும் முடி உதிரலாம், சத்துள்ள உணவு இல்லாமற் போனாலும் முடி உதிரலாம், இவையெல்லாம் சாதாரணமாய்ச் சிரசாசனம் செய்வதினாலேயே குணமாக்க முடியும். கூட, ஆகார சீர்திருத்தமும் சிறிது செய்து கொள்ள வேண்டும்.

தலை முடிக்கு வேண்டிய சத்தை நேரடியாய்ச் செலுத்த முடியாது. எதுவாயிருந்தாலும் ரத்தத்தின் மூலம்தான் கிடைக்க வேண்டும். அதுதான் நேர் வழி. வெண்டை, காரட், இலெட்டுஸ் கீரை முதலியவைகளைத் தினமும் சிறிது பச்சையாகவே சாப்பிட வேண்டும். மற்றும் காய் கறி, கீரை வகைகளைச் சத்து இழக்காமல் அளவுடன் ஜலம் வைத்து, அளவுடன் வேக வைத்துச் சாப்பிட வேண்டும். வெறும் சாதத்தையே போட்டு வயிற்றை நிரப்பாமல், காய்கறிகளை அதிகமாய்ச் சாப்பிட்டு, சாதத்தைக் குறைக்கவேண்டும். அந்த சாதமும் தவிட்டுடன் கூடிய அரிசியைக் கொண்டு கஞ்சி வடிக்காமல் தயார் செய்ததாய் இருக்க வேண்டும். வாரம் ஒரு தடவையாவது எண்ணெய் ஸ்நானம் செய்யலாம். கண்ட வாசனைத் தைலங்களை உபயோகிக்கக் கூடாது. காரமான சோப்பு வகைகளை முடிக்குப் போடக் கூடாது. பாசிப் பயிறு மாவு நல்லது. அல்லது சிகைக்காயுடன் பாசிப் பயிறு கலந்து மாவு செய்து வைத்து உபயோகிக்கலாம். நன்றாய்த் தினசரி அழுத்தமாய்ப் பத்து நிமிஷங்களாவது சீப்பினால் வார வேண்டும். சீப்பைச் சுத்தமாய் வைத்திருக்க வேண்டும். ஒருவர் உபயோகித்த சீப்பை மற்றவர் உபயோகிக்கக் கூடாது. தூசி அதிகமாய் உள்ள நகர வாசங்களில் தலைக்குப் பாதுகாப்பாகத் தொப்பி, தலைப்பாகை முதலியவைகளை உபயோகிக்கலாம்.

இந்தப் பாதுகாப்புகளுடன் சிரசாசனம் செய்து வந்தால் சிரசிற்கு நல்ல ரத்தம் வேண்டிய அளவு கிடைத்து, மயிர்க் கால்கள், வைகள் வேர்கள் எல்லாம் எப்பொழுதும் பலமாய் இருக்கும். அந்த சமயம் மூளையின் அடியிலுள்ள தலைமைக் கோளமாகிய பிட்யூடரிக்கும் நல்ல பலன் உண்டு. எனவே சிரசாஸனம் செய்பவர்கள் எப்பொழுதும் முடியைப்பற்றிக் கவலையில்லாமல் இருக்கலாம்.

எடுத்ததும் யாரும் முதலில் சிரசாசனம் செய்யக் கூடாது. புஜங்காசனம், சலபாசனம், பஸ்சிமோத்தானாசனம், ஹலாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம் முதலியவைகளை முறையே ஒரிரண்டு மாதம் பழகி, அதன் பின்தான் சிரசாசனம் ஆரம்பிக்க வேண்டும். முதலில் ஒரு நிமிஷத்தில் ஆரம்பித்துப் பின் இருபது முப்பது நிமிஷங்கள் வரை செய்யப் பழகிக் கொள்ள வேண்டும். அதையும் ஒரே தடவையில் செய்ய முடியவில்லையானால், இரண்டு மூன்று தடவைகளில் செய்து நமக்கு வேண்டிய நேரத்தைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். (தொடரும்)

• • •

• • •



# வயலை உழ வேண்டாம்!

பிரான்ஸ் தேசத்தில் இரண்டாவது உலகப் பெரும் போர் நடந்து கொண்டிருந்தபோது போர்முனையில் இருந்த தன் கணவனுக்குக் கிராமத்தில் இருந்த அவனுடைய மனைவி ஒரு கடிதம் எழுதினாள்: "வேலை செய்யக் கூடிய எல்லா ஆண் பிள்ளைகளும் கிராமத்தை விட்டுச் சென்றுவிட்டனர். நம்முடைய வயலை உழுவதற்கு ஆள் இல்லை. ஆகையால் நானே சென்று வயலை உழ வேண்டியிருக்கிறது."

இதற்கு அந்தச் சிப்பாய் உடனே ஒரு பதில் கடிதம் எழுதினான். "அருமை மனைவிக்கு, தயவு செய்து என்னுடைய நலத்துக்காகவாவது நம் வயலை உழ வேண்டாம். ஏனெனில் அதில் பல ஆயுதங்களை ரகசியமாக ஒளித்து வைத்திருக்கிறேன்."

கடிதம் வழக்கம்போலவே ராணுவ அதிகாரிகளின் பரிசோதனைக்கு உட்பட்டது. அடுத்த தினம் சிப்பாயின் வயலில் ஒரு முழுப் பட்டாளமே வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. நிலம் முழுவதும் தோண்டப்பட்டது. இரண்டு மூன்று அடி ஆழம்வரையில் அந்த நிலத்தைத் தோண்டி விட்டனர். ஒன்றுமே தென்படவில்லை!

இதைப் பார்த்து மிக்க கவலையடைந்தாள் சோல்ஜரின் மனைவி. அடுத்த தினமே இந்தச் சம்பவத்தைக் குறித்துத் தன் கணவனுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினாள்.

"நம் நிலத்தை யெல்லாம் தோண்டியாகி விட்டது. ஒரு புல் பூண்டோ, இரும்புத் துண்டோ ஒன்றுகூடக் காணவில்லை. நிலத்தில் சுமார் மூன்று அடி மண்ணை ஒரு தரம் கிளறிவிட்டதுதான் மிச்சம். நான் இப்பொழுது என்ன செய்யட்டும்? தங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன்."



சிப்பாயின் விடை மிகச் சுருக்கமாக இருந்தது: "இனி மேல் நீ தாராளமாக உருளைக்கிழங்கு பயிரிடலாம்!"—ஸ்ரீ.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
*116-119*, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

L. 181-50 TM

REGD. No- M. 4392

*Registered as a newspaper in Ceylon*

# நாளுக்கு நாள் அதிக தெளிவானதும்
# அழகானதுமான சருமம்



ரெக்ஸோனாவிலி
ருக்கும் 'கேடில்'
உங்கள் சருமத்திற்கு
புது ஆரோக்கியமும்
எழிலும் தரும்.





# ரெக்ஸோனா

'கேடில்'* கலந்த சோப்
இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

R.P. 85-50 TM